உ

கணபதிதுணை.

# திருநாவுக்கரசு நாயனார்

# பிள்ளைத் தமிழ்.

இது

ஸ்ரீவன்றொண்டரவர்கள் மாணாக்கர்

காரைக்குடி

சொ. சொக்கலிங்கச்செட்டியாரவர்களால்

செய்யப்பெற்று

பலவான்குடி

ப. சு. முத்துவள்ளியப்பசெட்டியாரவர்களால்

சிதம்பரம்

"ஸ்ரீகுஞ்சிதசரணம் பிரஸில்"

பதிப்பிக்கப்பெற்றது.

பிரபவ௵ வைகாசி௴ ௧௦௨

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசர் பிள்ளைத் தமிழ்.

திருக்கருணை பொதுவுலகர் பக்குவத் தளவின்முறை
சேர்தரப் பற்ப னெறிகள்
செறித்தரன் றருவேத மதைவடித் தேபொதுமை
தீர்த்துரிய சத்தி பாதத்
தெருட்பெரியர் மேற்கொண்டு சிவனொருவ னேமகா
தேவனெனும் வாய்மை தேர்ந்து
சித்தாந்த சைவநெறி தேற்றிநின் றுய்யுமா
திருவருட் சிறப்ப தேயாய்
அருட்பெரியர் தந்ததே வாரநிலை கூறிவெளி
யாகவருள் செய்த பொல்லா
ஆணவத னத்தினரு டானமென முற்றொழுகு
மாதிபர ணைப்ப ணிகுவாம்
உருக்கமிகு மணியதமிழ் வேததே வாரமிவ்
வுலகமுய வருள்செய் பரமர்
உயர்கயிலை வாசவா கீசர்வரு சேய்மகிமை
யுரைகவிக் கருள்க வென்றே.



இதன்தாற்பரியம், சிவபிரானுடைய (இரக்கம்)தயையானது கருணை அருள் என இருவிதமாம். சர்வான்மாக்களிலும் விரிந்து பொதுவாய் நிற்பது கருணை. இருவினைஒப்பு மலபரிபாகமுற்ற ஆன்மாவிற்சென்று அனுக்கிரகித்துச் சிறப்பாய்நிற்பது அருள். இது சைவநூற்றுணிபு. இப்பொதுக் கருணையை, உலகினர் அவரவர் பக்குவங்களினளவுக்கேற்பப் பலமதங்களினின்றுபெறுதற்காகச், சிவபிரான் பலமதங்களைவைத்து அவ்வுலகர்பொதுவில் மேற்கொள்ளும்படி தந்தருளிய வேதங்களை வடித்தெடுத்த சாரமாய் அப்பொதுமை நீக்கிச் சத்திநிபாதப்பெரியரே சிறப்பின் மேற்கொண்டு, சிவனொருவனே பரமென்னும் உண்மைதேர்ந்து தேற்றிநின்றுய்யும்பொருட்டு, அச்சிவனே தாமாகிய அருட்பெரியர்கள் தந்தருளிய தமிழ்வேதங்களாகிய தேவாரங்கள் இருக்குமிடமிதுவென்றுதெரிவித்து வெளிவரச்செய்தருளிய பொல்லா விநாயகரை, அத்தேவாரத்தை உலகெலாமுய்யும்படி

பாடியருளிய பரமராகிய கயிலாசவாச வாகீசர் இப்பூமியில் வந்தருளிய பிள்ளைமை மகிமையைப்பாடுகின்ற இப்பிள்ளைக்கவிக்கு அருள்க என்று துதித்துப் பணிகுவாம் என்பதாம்.

# காப்புப் பருவம்.

## சிவபெருமான்.

**தனதன தனதன தனதன தனதன தனதன தனதன தன தாத்தனு**

மதிநதி யிதழிபொன் முடிமிசை வனைபுல
கிைரக விருளிரி வகைமாற்றியே
மலியருள் புரிபிர ணவமுதல் சிவனென
மறைமுடி புரைபொருள் வலிதேற்றுவோன்
அதிர்கலி யுலகினி லயனெறி மிகையற
வருணெறி நிலைபெற வதுபோற்றுமாண்
பகிலமு நிறைதனை நிகர்வலி யுடையவ
னலதெனை யவர்களி னரிதாற்றுனு
இதமிது வெனவளர் கயிலையி னுறுமொழி
யிறையெனு முனியதை யினிதாக்குமா
இவண்வர வருளிய வருளுமை மகிழ்தரு
மிடனுறு சிவனடி யிணையேத்துவாம்
முதமிக வவனருள் சிரமிசை கொடுமுழு
துலகுய வவனிமுன் முறைநோற்றலால்
முழுதரு ளுருவுகொ டனுகுசொ லரசென
மொழிதரு முனிவனை நனிகாக்கவே. (க)

ஆன்மாக்களுக்கு அஞ்ஞானஇருளைமாற்றி ஞானஒளியைத்தருகின்ற ஞானதாதாவும், மலிஅருள் புரிகின்ற மோக்ஷதாதாவும் தானே என்பதை மதியும் நதியும் வனைந்தும், பிரணவப்பொருள் சிவனே என்று மறைமுடி கூறும் பொருள்வலியை இதழியை வனைந்துந் தேற்றுவோனென்க.

## உமாதேவியார்.

**தனனு தாத்தன தனனு தனதன தனதானன.**

அரனுன் மாக்களுய் வுறுமா வருதிரு வருண்மேனிகள்
அவையோ டேற்புற வருநா யகியுல கனையாருள்
ஒருவா தூட்டியி னுயிர்வாழ் வகைபுரி வுறுகோமளை
உமையாள் பார்ப்பதி யெமையாள் சிவைபரை யொளிர்சாமளை

மருவார் தாட்டுணை களினே கையினித மலர்தூவுதும்
மகிதா னேற்றுள பயனுர் தாவருள் வடிவேகொடு
திருவா மூர்க்கொரு முதலே யெனவரு திருவாளனைச்
சிவனே போற்றிடு திருநா வரசினை நனிபேணவே. (உ)

## விநாயகர்.

தனதன தானன தனதன தானன தத்தன தத்ததனு.

சிவபர மேபிர ணவமென மாமறை செப்புறு மெய்ப்பொருணேர்
தெளிதா வோவிய மேதம பார்வைதி கழ்த்துரு வக்களிருய்
அவிர்பிடி யாயரு ளியவரு ளானைமு கத்தனை யப்பானே
அளியுற வேநினை வழிபடு வார்செய லற்பின்மு டித்திதொழா
உவர்செய வீறுசெய் கெனுமது தாதையி னுய்த்தும்வ ழூத்திடமேல்
உறுசெய னேரருள் பிரணவ ரூபனை யுட்கொ டுறத்தொழுவாம்
புவனிமெய் வாழ்வுற வானரு ளால்வரு புத்தமு தச்சுவையே
பொழிதமிழ் மாமறை தருதிரு நாவர சைப்புர வுற்றிடவே.(ரு)

தெளிதா அருளிய ஆனைமுகத்தனை என்றியையும். தம பார்வை திகழ்த்து—சிவனுமை இருவர்பார்வையால் விளக்கப்பட்ட. எனும் அதனை அத்தாதையிடத்தும் உய்த்து அவன் வழூத்திட அதன்மேல் அச்செயல் நேராக அருள்பிரணவரூபனென்க.

## சுப்பிரமணியர்.

தானதன தத்தனு தந்ததன தனதாத்தன.

ஆருயிர்க ளிச்சைஞா னங்கிரியை யவைமேற்கொடவ்
வாமுறையி னுற்றுவாழ் கென்றவரு ளதனுற்றன
தேர்விழைவு சத்தியே வண்குறமி னிமையாப்பிடி
யிறில்செயல் முற்றுமோர் கின்றவறி வெனும்வேற்படை
ஓர்வலனி டத்துமோர் செங்கையினு முறமேற்கொடஃ
தோர்வுறவி ளக்குவே ளம்பொனடி யுனியேத்துதும்
நார்செய்தமிழ் முத்திவே தம்பகரு நலம்வாய்ப்புறும்
நாவரசை நித்தன்வாழ் சிந்தையனை நனிகாக்கவே. (சு)

உயிர்கள் இச்சாஞானக் கிரியாசத்திகளை மேற்கொண்டு வாழும்படி விழைவுசத்தி—இச்சாசத்தியாகிய குறமின்னையும், செயல்—கிரியாசத்தி யாகியபிடியையும், அறிவு—ஞானசத்தியாகிய வேற்படையையும் முறையே வலப்பக்கம் இடப்பக்கம் செங்கையிற்கொண்டு விளக்குவேள் என்க.

## திலகவதியம்மையார்.

தனத்ததன தனனதன தனத்ததன தனனதன
தனத்ததன தாத்த தனனா.

அரக்கனமு மொலியினுள மிரக்கமிக வுதவிசெயு
மதைப்பரம னூற்று மிதுதீ
தறப்புவியி னுறுதியென முனிக்குரைசெய் ததைவினவி
யருட்பரைபி னத்த விதுவா
தாக்கருணை யெனவதன்மெய் நிபத்தைவெளி செயவமுனி
தரைக்குளுறு காற்ற னருளீ
தாப்பரிவி னுடனுறுது மெனப்புடவி தனிலவுமை
தனித்தனளெ னப்பு கலுமா
அருட்குலவ முதலில்வரு தமக்கைமுறை திலகவதி
யனைப்புனிதை நாட்க மலநேர்
அடித்துணைக ணறுமலரி னருச்சனைசெய் குதுநிதம
வணக்கிளைய மூர்த்தி யினையாழ்
கருக்கடலின் முழுகுயிரை யருட்கைமலர் கொடுபரிவி
னெடுத்தினிது காத்த ருளுவோன்
கலக்கமுறு மருகமதம் விலக்கியருண் மொழியரசு
தனைப்பெரிது காக்க வெனவே. (௫)

இது தீது அற—இத்தீது நீங்க. பரைவினவி அத்தனே இதுவா உனது தாக்கருணை என, அதன்உண்மையான காரணத்தை அவன்வெளி செய, அவ்வுமை அவ்வாகீசமுனி பூமியிலுறும்போது, அருள் தருதற்காக அப்பூமியில் தனித்துவந்தனளெனும்படி முதலில்வந்த தமக்கைமுறையை யுடைய திலகவதி அன்னை என்க.

## திருஞானசம்பந்தர்.

தனனதன தாத்ததன தனனதன தாத்ததன தாத்ததனனா
சிவனுமையி னூப்பணுறு நிலையினையு மாற்றிமகி சீர்த்த தவமே
திருவுருவ மாப்புகலி நகரினுல வாப்பிரம தீர்த்த தடமேல்
திவள்தருமொ ராட்டைமக வெனவமறை யோர்க்குவகை தேக்க [வருசேய்
திவியபத நாட்கமல மலர்நிதமு மேத்திமலர் சேர்த்தல் புரிவாம்
அவிர்தனது தோற்றம்வின வாப்பொருவி லாப்புகலி கோக்கி [யணுகா

அவண்மெயளி கூர்த்தெதிர்கொ டனதடிமு னுற்பொன்முடி
[தாழ்த்,த பெரியோன்
கவிபமுத மூட்டிநமர் செவியகடு பூர்த்திபுரி காட்சிதருவோன்
கதியுதவு வாக்கரசு தனையுரிமை யாற்புரிபு காக்க வெனவே. (சு)

அம்மறையோர்—சிவபாதவிருதயர். தனதுதோற்றம்—சம்பந்தரது பெருங்கீர்த்தி. அணுகா—(நாவரசர்) அணுகி. தம்மை அன்புகூர்ந்து எதிர்கொண்ட அச்சம்பந்தரது அடிமுன் முடிதாழ்த்த என்க.

## வாகீசுரர்.

தானன தானதன தானன தானதன தனத்த தனன

மீகாதல் கூர்பரமன் வேதாக மாதிகளின் விளக்க முறவே
மேலாக வோதலுறும் வீறரும் வாய்மைமுழு விழுப்ப மிகுசீர்
வாகீசை பாகசிவ வாகீச பாதமலர் வழுத்தல் புரிவாம்
வானாடு நீடுபொழின் மீதோவில் கோகிலமு மறைக்கு முதறீம்
பாகாமெ னுமொழிய வேபால வாவுகிளை பரப்பு மனுவேழ்
பாலாய கோடிகளின் மேலாய மூலமனு பயிற்று வளனுர்
பூகோள மீதிலகு மாமூரின் வாழ்வைநிறை புகழ்த்த னதுபேர்
பூணேரி னுவரசை மேலோர்சொல் கோவைநனி புரக்க வெனவே

வாகீசுரர்— வாகீஸ்ரிபாகராகிய சிவபிரான். பெயரொற்றுமையால் நால்வர் வரிசைமுறையில் இரண்டாவதாகத் துதித்தனம். பால் அவாவு கிள்ளை என்க. தனது பேர்—அவ்வாகீசுர சிவநாமம். பூண் நேரில் நாவரசென்க.

## ஆலாலசுந்தரர்.

தானன தந்தன தனதாத்தன

நீலோவில் கண்டனரு ணிழன்மாக்கதி
நீறேறு செங்கைதொடை நிரைசாத்திடும்
ஆலால சுந்தரனை யடிபோற்றுதும்
ஆமூரில் வந்தருளு மரசீர்த்தெமை
ஏலாத வஞ்சநெறி யிடைவீழ்த்திடா
தேவாய்மை யின்பநெறி யினிலுாக்கியே
காலாதி வென்றபர கதிகாட்டிடும்
காமாரி யன்புருவை நனிகாக்கவே. (அ)

நிழலாகியசுந்தரன் நீறுவந்துகையால் மாலைசாத்து சுந்தரனென்க.

## திருவாதவூரர்.

தானதன தானதன தனனதன தந்த தானனு.

ஆதிகயி லாயகிலை யினையொருவி யன்பு நீடவே
ஆவியுய வாதபுரி யினில்வருந லந்த ஞானனை
வேதமுடி யாய்தமிழின் மறையருள்வி ள்ங்க வோதிடும்
மேதைமணி வாசகனை யனுதினம்வி ழைந்து கூறுவாம்
நாதனட நேரிலுறு குடமுழவ நந்தி யீசனே
நாமமணி வாசகனெ னியல்பெவரு நன்று தேறுமா
மாதகுதி ராவிடமெய் மறையிடைவ யங்க வோதியே
வாய்மைதரு நாவரசை மகிழ்புரவு மன்ற நீடவே. (கூ)

நாதனுடைய நடனத்துக்கு நேரில் குடமுழவொலிக்கும் நந்தீசனே மணிவாசகனென்று தமது திராவிடமறையில், "குடமுழ நந்தீசனை வாசகனுக்கொண்டாய்" என்று ஓதி உண்மை விளக்கிய நாவரசென்க.

## சண்டேசுரர்.

தனதானன தனதானன தந்தானன தனதாத்தன.

சிகையிறினி லயலோர்பரம் விண்டோவமெய் தெளிவாப்புகல்
சிவபூசனை புகிதாகம நன்றேறிய திறனுற்பொறி
தகையாநிறை யளியோடுசெ யொன்றேநிலை தனிவீட்டினைத்
தருவாய்மைய தெனவேதெரி சண்டேசுர னடிபோற்றுதும்
சகவாரியி னெமையாரு டந்தேகரை தனிலேற்றிடு
தலைவாரிகல் புணையாகமி தந்தேகுபு தனிதேற்றினன்
நிகமாகம நெறிவாழ்வுநி னைந்தேவரு நிலைவாழ்க்கையன்
நிறைநாவர சருண்மேனிமு னின்றேதிகழ் வகைகாக்கவே. (ய)

சிகை—அதர்வசிகை. அதன்முடிவில், வேதத்தில் அந்நியதேவ பரத்துவம் கூறினவெல்லாம் விட்டொழியும்படி தானொருவனே தியேயனென்று தெளிவாய்ப்புகல் சிவனென்க. பொறிதகையா—இந்திரிய நெறிகளைத் தடுத்து. சகவாரி—பிரபஞ்சசாகரம். ஏற்றிடுதலை, வாரியில் கல்லே தெப்பமாகச் சென்று தேற்றினவன். நெறி வாழவேண்டுமென்று நினைந்தே புவியில்வந்த வாழ்க்கையன்.

# செங்கீரைப் பருவம்.

---

வேதநிதி யாகம விசேடநிதி யிதிகாச
மிளிர்புரா ணாதி நிதிகள்
விளங்குவை திகமார்க்க நிதிசைவ சித்தாந்த
விமலசந் மார்க்க நிதியம்
ஓதுசிவ தீக்கைநிதி சரியைகிரி யாயோக
முயர்ஞான நிலைய திருமேல்
உயாறம் பொருளின்ப முதலதிரு மணவாழ்க்கை
யொளிர்திருநன் மக்க டிருவே
மேதைநிறை சிவநேசர் சிவமகிமை யாங்கணும்
விளக்குதிரு சிவத ளிக்கண்
விழைபூச னைத்திருவெ லாமென்று நிறைதலான்
மேவுதிரு வாமூ ரெனும்
சீதவள நாமநகர் மீதுவளர் சேமநிதி
செங்கீரை யாடி யருளே
சிவமேவு மெய்த்தவர் சொல் திருநாவி
னுக்காசு செங்கீரை யாடியருளே. (க)

நிகமாக மம்புகலும் வாகீச மாமறுவி
னிறைபொருட் பரம னேயாய்
நிலவியொளிர் நீதனிடை யேயவத ரித்தருளு
நீர்மையா னேரி லாமே
தகையதிரு வாமூரி லுன்முனைப் பாடியத்
தண்ணடையி னடுநா டுமேற்
றழுவுதண் டகனாடு சோணாடு *வானாடு
தகுபாண்டி நாடு சேர்
மிகுநாடு முதலாய நாடெலா முலகெலா
மேவுமுயி ருடன்வாழ் வுறும்
மெய்யெனவி ளக்கமுறி னின்மகிமை யெம்மவர்
விளம்புந் தரத்த தாமோ
திகழ்பரம னாமூரின் மகவின்வரு காமாரி
செங்கீரை யாடி யருளே
சிவமகிமை யமுதுநிறை யினியதமிழ் மொழியாசு
செங்கீரை யாடி யருளே. (உ)

*வானும் நாடத்தக்க பாண்டிநாடென்க.

துட்டருக் காற்றுதவி மேலுமவர் தீச்செயற்
றுணையதா யிடர்வி ளைக்குந்
துரிசினதெ னத்துணிந் ததுசெயா துலகெலாந்
தோமில்சித் தாந்த சைவ
சிட்டருக் கேயுதவி செய்துய்க வெனவரன்
திருவுளங் கொண்டு கயிலைத்
திருமலையி லபரசிவ னெனமருவு நினையனைய
திறலரக் கனைய டுத்து
மட்டிலுப காரநீ செய்ததீ தறவுதவி
வாய்மைநெறி யிற்செய் தீண்டு
வருகபுவி யேகுகெனு மகிழாணை முடியுற
வகித்துவே ளாண்†கு லத்த
திட்டமலி மகவின்வரு மிட்டநிறை பகவபர
செங்கீரை யாடி யருளே
தேவாதி பற்கினிய பாவாண சொற்கிறைவ
செங்கீரை யாடி யருளே. (ரு)

†குலத்து அதிர்ஷ்டம் என்க.

மண்ணுலகம் விண்ணுலக மற்றுலகம் யாங்கணு
மலிபெரும் பல்பு கழ்ச்சீர்
வாய்ந்தவரு மெய்தரிய சைவசித் தாந்தநிலை
மாண்பினுறு புநித வாய்மை
எண்ணரிய புகழெலா மொருவாநி லைக்களமி
தென்னுமகிழ் வால டுத்தே
என்றுநிலை யுற்றுடைமை யாயினிது தம்மையார்ந்
திலகலாற் புகழ னுறென்
அண்ணு மம்பெற்ற வேளாளர் குலதிலக
ரதன்மேலு மற்பு தச்சீர்
அவிர்தெய்வ மாண்புகழு மெய்துகென வெண்ணியோ
வவர்விழைய வருளி னுருவாய்த்
தெண்ணிலவு மகவாகி நண்ணியருள் சிவயோகி
செங்கீரை யாடி யருளே
தேவர்முனி வோர்பரவு நாவரச மாகுரவ
செங்கீரை யாடி யருளே. (சு)

புகழெலாம், நம்மை நீங்காமல் ஆதரித்துவைத்துக்கொள்ளமாட்டாத பிறரிடம் புகுந்துலைவதிலும், ஒருவாநிலைக்களமாகிய இதுவேசிறந்ததென்று அடுத்து என்றுந் தம்முடைமைப் பொருளாயார்ந்திலகலால் என்க.

நம்பதமெய் நிழலில்வா ழும்பருவ னாயுமதை
    நாடாது கூடு மன்பின்
நமந்துடலி னெடுவாழு மிதுபிறர்க் குதவியென
    நவில்சீவன் முத்த நிலையே
அம்பரிவின் மேற்கொண்டு நிற்குமிவ னம்பிரிவை
    யாற்றிலா னமையு ளத்தின்
அனவரதம் வைத்தபுக ழாளன்மக னெனவந்
    தருட்சைவ நிறுவு கென்றே
எம்பரனி னைப்புகழ னாரிய தவம்வாய்ப்ப
    வெய்துகெனு மாணை பேணி
யேயவனி யுய்யவந் தனையென்று மேதைய
    ரெடுத்தோது மெங்கண் மணியே
தென்பரவு மாமூரி லன்பர்தொழ வாழ்தேவ
    செங்கீரை யாடி யருளே
தேவார மோவாத தூவாய பாவாண
    செங்கீரை யாடி யருளே. (ரு)

எம்பரன், நமதுபதநிழலில் வாழும் பரமுத்திக்குரிய அதிதீவிரதரபரி பாகியாயிருந்தும் அதனைவேண்டாமல் கூடுமன்பினிற்கும்பிடலாகிய சீவன் முத்த நிலையே பிறர்க்குதவியாமெனக்கொண்டு இக்கயிலையில் நம்மைப்பிரி யாமலென்றும் வாழும் வாகீசமுனிவனுகிய இவன் நம்பிரிவைச் சகித்திலா னுதலால் நம்மையுளத்தில் வைத்த புகழாளன் மகவாய் வந்து சைவநிறுவுக என்று திருவுளங்கொண்டே உன்னைமகவாய் எய்துகவென்ற ஆணைஎன்க.

உலகெவற் றினுமுள்ள மாதர்களின் மேதகைமை
    யொளிர்குணங் கற்பு வடிவம்
உயர்பொறைந லீகைதவ சீலமனை யறமெலா
    முவகைநிறை வொடுச லிப்பின்
றிலகநா டொறுமியற் றுதலாதி சத்துவ
    வியற்கையே வாய்ந்த விவர்போன்
றிலங்குமா தினியாரெ னுவிதந் தறிஞர்க
    ளெடுத்தோது வாய்மை யிதனல்
மலருமா தினியாரெ னுமமே பிரசித்த
    மாண்பினெளிர் மனைவி யாரும்

வண்புகழ னொருமுறை முன்புபுரி நேரிறவ
மகவாகி வந்த மணியே
*திலகபுவி யாரூரி னிலவரசு நாமேச
செங்கீரை யாடி யருளே
சீததமிழ் வேதமுறை யேதருசு போதநிதி
செங்கீரை யாடி யருளே. (சு)

*திலகபுவி ஆரூர்—புவிக்குத் திலகமாகிய ஆரூர்.

## வேறு.

மதிதரு நிறைமதி யதனிலொ ரரைமதி மாசற நின்றூலே
மானுமெ னுவுரை யாடுவர் மாமுகம் வாணுதல் கண்டோர்கள்
இதனரு டருமிள முறுவலை யெழுநில வேயிது வென்பார்கள்
ஈதுன தாதையின் மாபுகழ் மேல்விரி யோர்புக ழென்பார்பின்
முதமிகு திருமுக மசைதொறு நினதருண் மூழ்குநர் நம்பாச
மோகறல் நீர்வரு வீரென லாமென மோதமி குந்தார்வர்
அதிபுக ழினர்மக னெனவரு குருபர னுடுக செங்கீரை
ஆவலின் மேவினர் காவல நாவர சாடுக செங்கீரை. (எ)

திருமுகம் இருபக்கமும்திரும்பி அசைந்தாடுதலை, நமதுபாசமோகம் அறுதலும், வருவீரென அழைத்தலுமாமென்று ஆர்வர்—வருவரென்க.

நிறைமதி தருமிரு சிறுமதி மகவுநி லாவுத லென்றேத
நிழல்விரி வயிரநன் மணிதிக ழிருகுழை நீடொளி தந்தாட
நறைதிசை களின்விரி தருபுழு கொடுகமழ் நானமு டன்சார்பு
நலனுறு திலகமு மதிகறை யிதுவென நாடியு வந்தாட
மறையதர் வணசிகை மிசையொளிர் சிவநிலை மாணென‡வன்பாளர்
வளர்சிகை மிசைபுனை வயிரவொண் மணியினின் வான்மையெழுந் [தாட
அறைமறை வடிதமிழ் தருமொழி யரசுக ளாடுகசெங்கீரை
அனுதின மிருவகை நிறைபணி புரிபர னுடுக செங்கீரை. (அ)

‡அன்பாளர் சிவநிலை மாணென்று கூற என்க.

எவைகளு மழிவுறு முகமுடி வினுமொழி வின்றே நின்றேறும்
எழில்வளர் கயிலையி னிறையருண் முனிவர்க ளென்பார் முன்பே
நவில்சிவ பரநிலை மொழிசெய வினுமிகு நன்பே துன்பார [நாம்
நவைமத நலியிடர் புரிபுவி மனிதர்க ணன்றே கொண்டாரத்

தவமலி சிவநெறி பரவல்செய் தயல்கடி தந்தே முந்தோகை
தருசெயல் புரிகுத லெனமகி தலம்வரு தண்பே ரன்பாள
சிவனரு ளிறைகவி தருதிரு வரசுகள் செங்கோ செங்கீரை
திருவதி கையினுமை திருமுன ரொளிர்மணி செங்கோ செங்கீரை.

கயிலையில் முனிவர்முன் சிவபரநிலை கூறுதலைக்காட்டிலும், நவை மதங்கள் இங்கு துன்பார நலியிடர் புரிகின்ற புவியில் மனிதர் நன்றேகொண்டாரும்படி சிவநெறி பரப்பி அயல்நெறி கடிந்து ஓகைதருசெயல் புரிகுதல் மிகுநன்பே எனவரும் அன்பாள என்க.

அவனியி லுயிரு ளமுதம னுகரவ ணைந்தா ளுந்தேனு
அடியவ ரிருதய மலர்முகிழ் விரிதல்செ யன்பா ரும்பானு
பவநெறி மதகரி யழிவுற வருமுயர் பண்பார் சிங்கேறு
பரகயி லையின்முனி வர்களி கொளுநிலை பண்டோ துங்கோல
தவநிலை முறைமையி னனிபுரி புகழினர் தஞ்சே யந்தீவ
தமிழ்நல னுணர்தர வரியன செயல்பல தந்தா ளுந்தேவ
சிவனரு ளிறைமணி கடமொழி யரசுகள் செங்கோ செங்கீரை
திவியரு முவகைசெய் கவிதரு தவமுதல் செங்கோ செங்கீரை.(௰

---

# தாலப்பருவம்.

---

முதல்வற் பாடு முனைப்பாடி முதுநாட் டரசே தாலேலோ
முதுசீர்த் திருவா மூர்க்குயிராய் முளைத்த முதலே தாலேலோ
இதமிக் குறுவே ளாண்குலச்சீ ரிலக்கு மணியே தாலேலோ
இனிய கொறுக்கை யினர்குடிக்கோ ரின்ப நிதியே தாலேலோ
துதைமெய்ப் புகழ ஞாரிய தொன்மைத் தவமே தாலேலோ
துணைமா தினியார் மடியில்வளர் தூய சேயே தாலேலோ
ததைசுத் தாத்து விதசைவ தாப நேச தாலேலோ
சாதுர் வேத வாகீச சாந்த தாலோ தாலேலோ. (க)

சூரும் பரவு பலமுனிவர் சூழ நடுவீற் றிருந்தருளிச்
சுத்தாத் துவித சித்தாந்த தூய நிலையே போதித்து
வாதன் கயிலை யமர்ந்தருளும் வாகீ சுரமா முனிவரனீ
மகிமா தவத்தா னரரூபம் வகித்தாங் குதித்தெவ் வறிவினரும்

விரவு குருமு ஞேர்கெனநூல் விளம்பு முறைமேற் கொண்டுய்
வியாசங் காட்டிக் குருமுகமா வித்தி யாரம் பம்புரிந்தா [வான்
தரமார் குருவும் வியக்குநிலை தருமாண் குரவ தாலேலோ
தனைநேர் திருவா மூர்வளர்மா தனமே தாலோ தாலேலோ.

வேளாண் குலமாண் குணமுமதன் மேலுங் கலைக டெளிகுணமும்
விரவு மாண்பா லறங்கள்பல விழைந்து புரிகின் ருசெம்மை
ஆளா யுயக்கொண் டருள்புரியு மாமூ ரடிக ளென்றுலகர்
ஆர்வம் பெருக வெடுத்துரைப்ப ரரசே நினசார் பால்வேளாண்
வாளார் குலமா தியவெல்லா மாண்பு பெறுநின் னியற்பெரிய
மகிமை முழுது முள்ளபடி வயங்க வுணரு மாண்பினரார்
தாளா தரிப்பார்க் கின்பருளுந் தனிமா முதலே தாலேலோ
சதுமா மறையை வடித்ததமிழ் தந்தாய் தாலோ தாலேலோ. (௩)

பிதுர ருறவர் மக்கண்மனை முதலாப் பேணு பாசத்தார்
பெறப்பல் பொருளீ குதலாகப் பேசு பாச தருமங்கள்
பொதுவி னுயிர்கட் கிதமாகப் புனல்வா விகணீர்ப் பந்தர்நெறி
புதுக்க லிருபா னிழல்விரிந்து புசிக்குங் கனிகாய் தருமரங்கள்
வதிய வமைத்த லன்னுதி வழங்கல் பிணியா தியகளைதல்
மணமா தியசெய் வித்தன்முதல் வயங்கும் பசுதன் மங்களெலாம்
தனையு முலகோர்ந் துயப்புரிந்த தனைநேர் வள்ளா ருலேலோ
சைவா திபனே திருவாமூர்த் தலைவா தாலோ தாலேலோ. (௪)

சிவமே தருமா கமமுறையே தீக்கை மேற்கொண் டதற்குயிராஞ்
சிவபூ சனையன் னதற்குயிராய்த் திகழ்மா கேச பூசாதி
சிவனா லயத்திற் றினப்பணிக டிருந்து நந்த வனப்பணிகள்
சிவமார் திருத்தார்ப் பணி†மூன்றாய்த்திகழ்பூசனைக்காம் பொருட்பணிகள்
சிவமாண் புணர்த்து வேதாந்தந் தெளிசித் தாந்த மெடுத்துரைத்
சிவமே விளக்கல் முதலாய சிவதன் மங்க ளெல்லாமுஞ் [துச்
சிவமார்ந் துலக முயப்புரிந்த திருநா வரசே தாலேலோ
சிவமே திகழுந் திருவேடச் செல்வா தாலோ தாலேலோ (௫)

†மூன்று பூசனை—நித்தியபூசனை, நைமித்திகபூசனை, காமியபூசனை.

## வேறு.

உடல்பொரு ளாதிய நிலையில வாதலி னுளபொழு தேநிலையாய்
உறுதரு மம்பல புரிபுல கம்பெரி தொளிர்நல னுறுகெனவே
அடைவின றங்கள்செய் துரியசை வந்தெளி வாகவி ளக்கிடுவான்
அமணிடர் தருநெறி புகுதன்மி னிறைசிவ னருணெறி யுறுமினெனத்
திடமுற ‡மொழிதலி னமணிலை சேர்ந்தவர் தீச்செயல் காட்டியொரீஇச்
சிவபர நெறியுறி னெவருமெய் தேர்ந்தது தீர்ந்தருள் சேர்ந்துசிவ
தடநெறி யுறுவரெ னுளனொடு சமணெறி சார்ந்தவ தாலேலோ
தமிழ்மறை யமிழ்தரு ணிறைமொழி யிறையவ தாலோ தாலேலோ. (௬)

கொலையக னற்குண நிலையரெ னப்பிறர் குறுகிய மண்மதமே
கொண்டுறு மாறுபு றத்தது காட்டுபு கோதுறு மக்கிரம
நிலையக னிற்கொடு கொலைநனி முற்புரி நீசர மண்பதகர்
§நிதரிச னத்தது காட்டியொ ழித்தரு ணிறைசிவ நெறிவிளக்கும்
நலமதி யற்றுது மெனவம ணுற்றத னலன்வெளி யிற்புரியா
நண்ணுத னக்கும னெண்ணரு மெய்க்கொலை நாடினர் செயலோர்த்தே
சலனம றச்சிவ் சமயநி றுத்திய தாபர தாலேலோ
தாவிறென் மறைதரு நாவர சருணிதி தாலோ தாலேலோ. (௭)

துட்டன ரக்கன கட்டம்வி லக்கிய சொற்றரு மற்புதவி
துரிசென வரனுரை செயலினவ் வெதிர்மறை துரிசற வாற்றியருள்
நட்டந விற்றிறை சைவம்வ ளர்த்தலந் நாதன தாணையென
நயந்தம ணுற்றவர் தீச்செயல் பயனற நண்ணியி ரிந்தரசன்
மட்டறு பாதக ரிச்சம ணுதரென் வாய்மையு ணர்ந்துபினுள்
மற்றவர் கெட்டொழி யப்பளி பாழிகண் மாற்றுபு குணதரநேர்
சட்டவி யற்றிய விட்டம ளித்தருள் சற்குரு தாலேலோ
தற்பர னைப்பர சற்புறு சொற்பர தாலோ தாலேலோ. (௮)

துஷ்டனாகிய அரக்கனுடைய கஷ்டத்தை விலக்கும்படி அதற்கு உபாயஞ் சொன்ன சொல்லளவினதாகிய அன்புதவியை, அரன் (துரிசு) குற்றமென்று உரைசெய்தலால், அக்குற்றத்துக்கு எதிர்மறையாகிய குணத்தை அத்துரிசுநீங்கும்படி ஆற்றி, அருள்நடஞ்செய் இறைவனது சைவம் வளர்த்தலே அந்நாதனது ஆணை என்று நயந்து அதுசெய்தற்கே அமணுற்று அவர்செயல்கள் பயனற அமர்ந்து விலகி அவ்வரசன் பின்பு உண்மை

‡மொழிதலைக்காட்டிலும்.
§பிரத்தியக்ஷத்தில்.

தெரிந்துவந்து அடியேன் அறியாது செய்த அபசாரம் பொறுத்தருள்க என்று பணிந்துகிடந்து பின் அமணர் கெட்டொழிய அவர்கள் மடங்கள், கோயில்களை இடித்துக்கொண்டுவந்து திருவதிகையில் குணதரேச்சுரமென் றொருகோயில் செய்து சைவநிலை நின்றுவாழும்படி இஷ்டம் அளித்தரு ளிய சற்குருவே என்க.

ஊடுதல் காமக் கின்பென நூல்புக லுதனைவி ளக்கிடவோ
உனதரு ணாயக னினைமகி யுறுகென வோதிய நாணுமே
தேடிநி னக்கரு ளுதுமெனு ரைப்படி சேர்கில னென்றாடு
திறத்தினு வர்த்தரை யாமம ணிற்கிடை செய்தனை யென்றோர்வான்
ஆடுறு சேவையர் காவல ரோவினல் லாறுதெ ரிந்துணர்ந்தும்
அரனரு ளாமையி னூற்கொலை மறையம ணார்ந்தனை யெனும்வாய்மை
தாடலை சார்பெரி யார்புகல் சீர்முதல் சார்பர தாலேலோ
தவமலி சிவமண நிறைதிரு மொழியிறை தாலோ தாலேலோ. (கூ)

உனது நாயகராகிய சிவபிரான் உன்னை இப்புவிக்கு வரும்படி கூறிய நாளில் நாமே உன்னைத் தேடிவந்து அருள்வோமென்றபடி வந்து அருளா மையால் ஊடியதன்மைபோல, அமண்மதமாகிய உவர்த்தரையில் கிடத்த லைச் செய்தனை என்பதை யாவரும் அறியும்படி சேக்கிழார்பெருமான் "நல்லாறு தெரிந்துணர்ந்தும் நம்பரு ளாமையினால், கொல்லாமை மறைந் துறையும் அமண்சமயங்குறுகுவார்" என்று அதனுண்மையைத், தாள் தலை சார்ந்த பெரியார் புகல் முதல்வனே என்க. தாடலை—நமது சுத்தாத்துவித நிலைக்கு எடுத்துக்காட்டுவமையாம்.

தொண்டினு றைப்பினில் வென்றமை தொண்டின தூப்பய னிம்மையுறல்
துலக்கிட வேயம ணுற்றருள் செய்தமை சொற்றன ரப்பூதி
குண்டர்கு ழாத்துறு காலும ருதியல் குலசிவ பூசாதி
குறைவற வொருபொழு தினுமற வாதுகு யிற்றுவ லென்றேநீ
மண்டரு ளாற்புகன் முற்பதி கத்தின்வ ழுத்தினை யோராமே
மடமிகை யாற்பழு தோதுநர் தீதினி மாற்றிமெய் காட்டுநரார்
தண்டலி லாதொளிர் தொண்டர்க ணாயக தற்பர தாலேலோ
சைவம்வி ளக்கிய தெய்வமொ ழிக்கிறை தாலோ தாலேலோ. (ம)

நீ, திருத்தொண்டினுறைப்பாலேயே அமணரைவென்றமையும் அத் தொண்டின்பயன் இம்மையிலுமுளதாமென்பதையும் விளக்கவே அமண் புகுந்தருளினை என்று அப்பூதியடிகணாயனார், "நாணிலமண்பதகருடன்,

ஒன்றியமன் னவன்சூழ்ச்சி திருத்தொண்டி னுறைப்பாலே, வென்றவர்'' என்றும் "நம்மையுடையவர்கழற்கீழ்நயந்ததிருத் தொண்டாலே, இம்மையிலும் பிழைப்பதென வென்போல்வா ருந்தெளியச், செம்மைபுரி திருநாவுக்கரசர்'' என்றுங் கூறித்தெரிவித்தனர். நீ சமண்புகுந்திருந்தபோதும் சிவபூஜாதி நற்செயல் மறவாது செய்துவந்ததைநீயே முதற்பதிகத்தில் "எற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவனெப்பொழுதும்'' "நெஞ்சமுமக்கேயிடமாகவைத்தேனினையாதொருபோதுமிருந்தறியேன்'' "சலம்பூவொடுதூபமறந்தறியேன்தமிழோடிசைபாடன்மறந்தறியேன், நலந்தீங்கிலுமுன்னைமறந்தறியே னுன்னாமமென்னாவின்மறந்தறியேன்'' என்பன முதலிய வாக்குகளால் விளக்கி வழுத்தினை. இவை ஒன்றையுமுற்று நோக்காமல் மடமை மிகுதியால் நீ, சமண்புகுந்தது தவறென்றோதுகின்றவர் தீமையைமாற்றி உண்மைகாட்டுபவர் இனி யாவருளர் என்க.

---

## சப்பாணிப் பருவம்.

அமணழிய முறுகுபத முறுமளவு மமணருட
னுண்டமர்ந் தூடன் மாற்றி
அருள்வலிது வந்தழைத் தாங்கமல னருண்முறைய
தாயவன் சூலை சார்ந்தவ்
வுமைமகிழ்ந னணையோர் தாவழைத் திடவமணே
யொருவியாங் கேகி யுலகர்
உம்முறைமை தேர்ந்துறத் திலகவதி யம்மையா
ரொண்பதஞ் சார்ந்தி றைஞ்சித்
சமணர்குழு வுடனுற்ற பழுதொழிய வருண்முற்று
சைவமெய்த் தீக்கை பெறுகால்
சாற்றுமவ் வன்னையதன் முன்னுதவு வெண்ணீறு
தனையேற்ற செங்கை மலரால்
தமமுலகி னொழிபுசிவ நெறிபரவ வருகுரவ
சப்பாணி கொட்டி யருளே
தாவிறிரு வாமூரி னுவரச மாதேவ
சப்பாணி கொட்டி யருளே. (க)

அருளினுறு பற்றுமுற் றொழிபுமே லனையவரு
ளாயதா யுடன டுத்தே
அருண்முதல்வ னேருய்ப்ப வாங்கிரண் டற்றபுநி
தாத்துவித மெய்த்த கின்பம்
மருவலே முத்தியென் சித்தாந்த நிலையைநேர்
வயக்கவோ திலக வதியார்
வண்பூதி தந்தெழுத் தைந்தோது சிவதீக்கை
மாண்புரிந் துடன மைத்தே
திருவதிகை மருவுவீ ரட்டான நாதனார்
திருமுன்பு சேர்ப்ப நீயச்
சிவரூப தெரிசனை யோகபோ கந்தனி
திளைத்தினிது கூப்பி யன்பு
தருகமல மென்கைகளி னுருகமல மன்குரவ
சப்பாணி கொட்டி யருளே
தாவாத மாகாத லாமூரின் வாகீச
சப்பாணி கொட்டி யருளே. (௨)

திலகவதி யென்பெயரி னுடன்மருவி நன்புதவு
திருவருளி னதிகை நாதர்
திருமுன்பு வந்தளவி னன்புநீ ரருளுததி
சேர்ந்திரண் டறக்க லப்பத்
தலனுறவி ழுந்துபல முறைபணிந் துரைசெய்நாத்
தழுதழுத் தவச மாய்ச்சுத்
தாத்துவித மெய்க்கலவி யிற்பிரிவி லாதுடன்
றழுவுசிவ மாய மர்ந்தும்
அலையொருவு மாங்குநா மாளாமென் மெய்கண்ட
வாகமம்வி ளக்கும் வாய்மை
அறிந்தகம் பரமுதல தீமைநீத் துலகுய்ய
வஞ்சலிவ ழாம லோர்க்கும்
சலசமல ரங்கைகொடு நலனருளு மெங்கள்பர
சப்பாணி கொட்டி யருளே
தனைநிகரு மினியதமிழ் மறையருளு மொழியரசு
சப்பாணி கொட்டி யருளே. (௩)

மலமுளைய சேடமா யொழியஞா னப்படையின்
மாய்த்தொளிர் சிவத்து வஞ்சார்
வாய்மைநேர் காட்டியெம் பிரானம்மை யாட்கொண்டு
மன்னுசீர் வாய்த்த திந்தத்
தலமிதனி லதனையா வருமுணர்ந் துய்கெனுந்
தண்ணருளின் மாண்பி னீயத்
தளியினு வாணங்க ளிடைமுளைத் தெழுபுற்க
டம்மைவே ரொடுக ளைந்து
நலமருவு பரிசுத்தி செயவினிது மேற்கொண்ட
ஞானவாட் படையி தென்றே
நவிலுமுழ வாரமதை யனவரத மேந்தியொளிர்
நளினமல ரங்கை யதனுற்
சலனமறு மன்பர்தொழ நலமுதவு மின்பமுதல்
சப்பாணி கொட்டி யருளே
*தாமூரு மினியதிரு வாமூரின் மொழியரசு
சப்பாணி கொட்டி யருளே. (ச)

* தாமம்—ஒளி. அது ஈறு கெட்டுநின்றது.

படைப்பளிப் பாயவிரு பெரியதொழில் புரிதேவர்
பல்லுகம் பறந்தி டந்தும்
பகர்வேத முதலபல முறையோதி நேடியும்
பார்க்கவுமொ ணாத சேய்மை
யுடைப்பரனை நேர்கண்டு பிரிவறக் கலந்தின்ப
முற்றுவாழ் நிலையி னணிமை
யுறத்தந்த தொருவிலரு ளாதலா லனையவரு
ளுருவினிவ் வதிகை நாதன்
இடப்புறந் திருக்கோயில் கொண்டுதிரி புரசுந்த
ரிப்பெய ரிலங்க வாழும் *
என்றுமிவ் வனைதிருமு னின்றுகும் பிடுதலே
யிதமெனக் கூப்பி நிற்குந்
தடப்பதும மென்கையால் விடைப்பாம னன்பநீ
சப்பாணி கொட்டி யருளே
தமிழ்வேத நிறைநாவி னரசாய பரமேச
சப்பாணி கொட்டி யருளே. (ரு)

* வாழும்—முற்று.

## வேறு.

திருப்பழை யாறைய ருட்பரன் வடதளி யிற்சிவ சந்நிதியைத்
தீயம ணாதர்ம றைத்தவர் பாழியெ னச்செய வாங்கெதிர்நீ
விருப்புட னஞ்சலி செய்தது தெரிகுநர் வேறிது பாழியென
விமலன தளியல தேனம திருகைகு விந்தில வென்றவணீ
யிருப்பவ டுத்தா சருளினி டித்ததி லக்கிட வுட்சென்றவ்
விலிங்கமெய் கண்டுணெ கிழ்ந்துப ணிந்தரு ளெய்திய மெய்ஞானக்
குருப்பொலி செங்கை விரித்தினி தங்கண கொட்டுக சப்பாணி
குலவதி கைப்பதி நிலவுமொ ழிக்கிறை கொட்டுக சப்பாணி. (சு)

சிவதளி யன்றிது வென்றிடின் முன்றெழு செங்கைகு விந்திலவிச்
சிவதளி யுட்சிவ னடிதொழு தல்லது செல்கில னென்றவணீ
சிவநிறை திருமொழி தருதலி னினதொளிர் திருவுரு வமுஞான
சிவவடி வென்பது மமணர்ம றைத்தது தெரிபத னுட்பரம
சிவனமர் கின்றன னென்றத னுண்மைதெ ளிந்துகு விந்ததுநின்
சிவகர மென்பது மோர்ந்தன மத்தகு சிவமுணர் செங்கையினல்
குவலய மிசையொளிர் திருவதி கையின்மணி கொட்டுக சப்பாணி
குளிர்சிவ மணநிறை தமிழ்மொழி யிறையவ கொட்டுக சப்பாணி. (எ)

சதுர்வரு ணத்துயர் பனவர்கு லோத்தம தவநிறை யப்பூதி
சதுர்மறை புகல்மனு முதலென வேநின சால்புணர் வாலுணர்வாற்
கதுமென நினதடி மிசைமனை சுதர்கள்க டும்பொடு தாழ்ந்துபணீஇக்
கண்பொழி யின்புத கம்பத மன்புக லந்தபி டேகித்தே
விதிமுறை பூசனை செய்துப தோதக மிசைபுதெ ளித்துமுடி
மேலுந மந்துகு வித்துவி ரித்திடு மென்கையின் வெண்ணீறு
குதுகுல முறவினி தருள்கா மலர்கொடு கொட்டுக சப்பாணி
கோவர னதிகையி னுவா செனுமணி கொட்டுக சப்பாணி. (அ)

சிவமக மாதியி னிறைசிவ னேவனி செனனமுன் வாகீச
சிவகட மீதலு மோர்த்திடும் வேதசி வாகம விதியிஃதச்
சிவமனு மேன்மையை யிதுமுத லாய திறத்துண ரப்பூதி
சிவவிய லுற்றொளிர் நீயரு ளாலன சீர்ப்பெயர் மேற்கொளுமெய்ச்
சிவனென வேதெளி புனதிரு வடிமுடி சேரந மப்பவுநீ
சிவதன மேரிநம வாதலி னவனிடை சேர்கவிந் நமவெனவே
குவிதரு மஞ்சலி யெதிர்செய்க ரங்கொடு கொட்டுக சப்பாணி
குலமறை தெளிதமிழ் மொழியா சருண்மணி கொட்டுக சப்பாணி. (கூ)

சிவயாக முதலிய எல்லா யாகங்களுக்கும் இறைவன் சிவனே. எந்த யாகமும் அக்கினியின்றியமையாது. அவ்வக்கினி எந்த யாகத்திலும் வாகீசுர சிவகடமூலமாகத்தான் முதலில்வரும். இதனாலுந் தெளியலாம். ¶நமஸ்காரம் சிவசொத்தே.

திறையக விழியுல குணர்வற வருள்சிவ மேதெரி நிலையினர்மெய்ந்
நெறிதர வருசிவ சுந்தர ரன்பொடு நின்றொரு நம்பியென
முறையின்வ ணங்கிவ ழுத்திடு சீரினர் மூதகு மப்பூதி
முனிவரு நின்பெயர் மாமனு வேசித மொழிதலு மெழுதலுமே
நறையித ழியனடி யெளிதினி தருண்மென நண்ணிய தெய்தினரிந்
நலனினு நினதொழி வறுசிவ நிலையிய னடியுய் விலரூழின்
குறையல தறைவதெ னிறைமொழி யிறையவ கொட்டுக சப்பாணி
கோதறு மேதைய ரோதுறு போதக கொட்டுக சப்பாணி. (ய)

---

# முத்தப்பருவம்.

---

சிவநம்பி திருநின்ற செம்மையே செம்மையாக்
கொண்டதிரு நாவி னரசேன்
திருமொழியு மப்பூதி யடிகளார் செம்மைபுரி
திருநாவி னரச ராதி
தவகன்பு தருமொழியு முற்றுநோக் கன்பர்நீ
சமணிலையு ளூற்ற ஞான்றும்
சைவநல முற்றிடச் செம்மையே செய்த†நிலை
சாற்றுவார் கோண லின்மை
நவில்கின்ற வதன்முனீ நினையாம லொருபோது
நானிருந் தறிகின் றிலேன்
நளிர்சலம் பூதுப மாதிகண்ம றந்திலனென்
னயவாக்கு முதலு நேரே
திவள்கின்ற கருணையொடு நிசமெங்கு நிகழவருள்
செய்தவாய் முத்த மருளே
திலகவதி யனையினுட னுலகமுய வருமரசு
திருவாயின் முத்த மருளே. (க)

சிவநம்பி—சிவனாகிய சுந்தரர்.

†நிலை சாற்றுவார் கோணலின்மை சாற்றுவார் என்க. அதன்முன் நீ அருள் செய்தவாய் என்றியையும்.

உனையழைத் திடவந்த சூலையருண் மீளாது
டன்கொண்டு சென்ற வன்மை
உணர்த்திநின் பெருமைதேற் றருண்மொழித் தேவருள
மோராது சூலை நோயால்
இனைதலுற் றனையெனவி சைக்குநரு முண்மையோர்
கென்றுளங் கொண்டு நீயே
இன்னுயிர்ம லப்பிணியு முடலினுறு மெய்ப்பிணியு
மென்றுமெம் பாங்கு நண்ணு
அனையபிணி நாமறியம் விடயமா வதுமில்லை
யஞருமிலை யென்னும் வாய்மை
அனைவருமு ணர்ந்துய்ய நடலையில் லோம்பிணியு
மறியோமெ னுவு ரைத்த
வனைபவள மிரியவொளிர் தனைநிகரு மரியதிரு
மணிவாயின் முத்த மருளே
மறைபரவு மதிகைநக ருறைவரத மொழியரசு
மலர்வாயின் முத்த மருளே. (உ)

"நாமார்க்குங்குடியல்லோம்" என்ற திருத்தாண்டகத்திற் காண்க.

அரியயன்மு னையமும் மலசகித சீவர்களை
யடிமையாக் கொண்டு நன்றுள்
அமலபசு பதியெனுஞ் சிவனருளி னுலனைய
வமலசிவ னுகி யென்றும்
பிரிவில்சுத் தாத்துவித நிலையினின் றருளுநின
பெருமைநீ யேயு ணர்த்திற்
பேதமற வாகீச சிவனீயென் வாய்மையே
பேணியுல குய்யு மென்னுங்
திருவுளத் தாலெண்கு ணத்துளோ மென்றுநீ
தெளியவுரை செய்த தோரார்
சீவநிலை நின்னிடையு மோதிநா குறுவரவர்
தீமைவீண் போகு மோவப்
பாவுசிவ வியன்முழுதும் விரவியொளிர் நினதியல்பு
பகர்வாயின் முத்த மருளே
பகருமா மூரில்வரு நிகரில்வா கீசமணி
பவளவாய் முத்த மருளே. (௩)

"நாவார நம்பனையே பாடப்பெற்றோம்" என்ற திருத்தாண்டகத்திற் காண்க.

அனவரத மமலசிவ பதநிழற் புனிதாத்வி
தானந்த வெள்ள மீதே
அமர்தலே நின்னியல்ப தாதலா னீற்றறையி
னமர்காலு மனைய வெப்போர்
இனையுமரு வாவின்ப மயனுய மர்ந்தனை
திருந்தறிஞ ரோர்வர் வாய்மை
தீத்தம்ப னுதிநீ செய்திலைதி ரண்டெரி
திறற்பெருந் தீயு மாங்கு
நினையணுவு மெய்தாமை தீயியல்பு மன்றுமு
னிகழ்த்தியாங் கென்று மின்ப
நிமலவடி வினனீயென் வாய்மையே யாங்கணு
நேருணர மாசில் வீணை
யெனவெடுத் தருள்சுருதி நனிவிளக் கிடுமனைய
வெழில்வாயின் முத்த மருளே
இறைவனருண் முறையதிகை யுறைதமிழி னிறைசொலர
சினியவாய் முத்த மருளே. (ச)

அஞ்சுறு மைம்முதல வென்றுமொரு வாதனை
யடுத்தலா லளவி லாற்றல்
ஆதியெண் குணத்தனீ யாமிதனை நீயேநி
னருட்சுருதி யிற்றெ ளித்தாய்‡
விஞ்சுமித் திறலானி னைக்கண்ட மட்டவல்
விடுத்தழு டிச்சென் னியே
விளங்கநிறு வமண்கையர் மதவெள்ள மொழுகுதிறல்
வேழத்தை யூக்க வனைய
நஞ்சினுங் கொடுவேழ நெருங்க னேர்கண்டுமது
நாணவஞ் சுவது மில்லை
நாமஞ்ச வருவது மில்லையெனுஞ் சுருதிநீ
நவிலளவி லனைய களிறுன்
செஞ்சரணி றைஞ்சலினின் மைந்தொளிரும் வந்தனைய
செய்யவாய் முத்த மருளே
செழியதமிழ் விழியின்மகி யுழிவருமெய் மொழியரசு
திருவாயின் முத்த மருளே. (ரு)

‡ "அஞ்சுவதியா தொன்றுமில்லை யஞ்சவருவது மில்லை" என்றதிற் காண்க. கண்டமட்டும் அவல் விடுத்து—கழுத்தளவு பள்ளத்தில் விடுத்து.

நின்சரித முன்னரே யுமைவினவ வேகாந்த
நிலைரகசி யத்தி னோதும்
நிமலனரு ளால்வந்து சைவவான் பயிர்வளர
நீடமண் களையொ ழித்த
பின்சைவ நெறிபற்றி யுலகுயச் சாந்தவியல்
பேணியே கொன்றை சூடும்
பிரானைமற வாமலின் னேயுளங் கொண்மினிது
பேணிடார் கெடுவர் பேணும்
நன்செயல ருய்வரிது புரவசுரர் தமினென்னி
னன்குணர்மி னமண ரென்னை
நலிகலிற் கட்டிநீ ருய்ப்பவா னுமமே
நானவின் றுய்ந்த னன்றே
வென்சொலித மன்னுரைத் துன்சரித மும்மிலக்
கினியவாய் முத்த மருளே
யாவருமுய் யோவிறமிழ் மேவுமொழி நாவரச
வெழில்வாயின் முத்த மருளே. (கூ)

திருநாவுக்கரச! நீ துஷ்டனுக்கு உதவிசெய்தது குற்றமென்றொரு காரணங்காட்டி உன்னைப் பூமிக்கு அனுப்பிச் சைவஸ்தாபனஞ் செய்விப்பத் திருவுளங்கொண்டு உன்முகமாக நடக்குஞ் சரித்திரத்தை நீ பூமிக்கு வருமுன்னரே தமது திருவாக்கினால் தெரிவித்தருள ஆசைப்பட்டு, அத்திவ்விய சரித்திரங் கேட்டற்குரியபக்குவமுள்ளவர் உமாதேவியாரே எனக் கருதி அவர் கேட்கும்படி அதுவும் பகிரங்கமொழிந்த ஏகாந்தஸ்தானத்தில் அதிரகசியமாக அருளிச்செய்த சிவபிரான் அவ்வாறு ஆணைதந்தருளியபடி நீ இப்பூமியில் வந்தருளிச் சைவப்பயிர் வளரும்படி அமணக்களை நீக்கிய பின் உலகெலாம் சைவநெறியே பற்றி உய்யும்படியும் உன் சரித்திரக் குறிப்பு உன்திருவாக்காலும் விளங்கும்படியும் உனது அதிபரமாப்த உபசாந்த நிலையே பேணிநின்று கொன்றை சூடும்பிரானை "அன்றறிவா மென்னாது" இப்போதே உளங்கொண்டு பேணிஉய்யுங்களென்றும், அதிகுரூரவீரத்துவ நிலையில்நின்று, பேணாதவர்கெடுவரென்றும் இவ்விருவிதமும் திரிபுரத்தசுராிடத்தும், என்னிடத்துங் காணுங்கள். திரிபுரத்தசுரர் விஷ்ணுசெய்த வஞ்சனையால் பேணுதலொழிந்தமையால் எரிந்து நாசமானார்கள். அமணர் பெருங்கல்லிற்கட்டிக் கடலிற்றள்ளிய காலத்தும் பேணுதலொழியாமையால் நான் உய்ந்தேனல்லவா என்ற சொற்களால் இதஞ்சொல்வி உனது சரித்திரமும் விளக்கியருளிய திருவாயினால் முத்தந்தருக என்க.

இதனைத் திருநீலக்குடித்திருப்பதிகம், திருக்குறுந்தொகை,

கொன்றை சூடியைக் குன்ற மகளொடு, நின்ற நீலக் குடியா னேயெனீர்
என்றும் வாழ்வுகந் தேயிறு மாக்குநீர், பொன்றும் போது நுமக்கறி வொ
[ண்ணுமே
நேச நீலக் குடியா னேயென, நீச ராய்நெடு மால்செய்த மாயத்தால்
ஈச னோர்சர மெய்ய வெரிந்துபோய், நாச மானார் திரிபுர நாதரே. [னால்
கல்வி னோடெனைக் கட்டி யமண்கையர், ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கி
நெல்லி னீள்வய னீலக் குடியரன், நல்ல நாம நவிற்றியுய்ந் தேனன்றே.

என்ற திருமந்திரங்களாற் காண்க.

## வேறு.

சமணர்கொ டுஞ்செய லெவைசெயி னும்புடை சார்தலு மின்றெனினுந்
தடுப்பது மின்றிய மர்ந்தது நின்னுப சாந்தம் விளக்கிடுமக்
கமையியல் பாலுல கினருய வோது கருத்தின்ம னத்தை விளீஇக்
கடவு ளிழைத்தந முடலுறு நாளொரு கணமும்வி லக்கவொணா
தமலனை யற்பொடு மற்பக லொழிவற வலறிவ ழுத்தியவன்
அருளெலை நின்றுய்மி னினிதுரை செய்தன னாலினி யென்மீது
மும்மையுமோர் குற்றமி லெனவருள் வாயினின் முத்தம ளித்தருளே
முனிவரு நனிதொழு தனிமொழி கனியிறை முத்தம ளித்தருளே. (எ)

கமை—க்ஷமை. அது பொறுமை. மும்மையும்—திரிகாலத்தும். அன்பிற் சிறந்து அறிவிற்பெரியராயினார், சன்மார்க்கமிதுவே என்று பன்முறை கூறவும், அந்நன்மார்க்கம் பேணிநின்றுய்யாது நினைத்த நினைத்தபடி போகங்களை அனுபவித்தற்கு விரோதமாயிருத்தலால், கடவுள், வேதாகம புராணாதிகளில் விளக்குகின்ற வருணாச்சிரம தருமவரம்புகள் தவறென்றும், எல்லாச்சாதியாரும் ஒன்றாய்க் கலந்து உண்டுடுத்து வாழ்தலே முறையென்றும் புராணாதிகள் கட்டுக்கதைகளே (பொய்யே) என்றும், மடம்பிடித்த முருட்டுப்பிடிவாதத்தால் விபரீதமே பேசுகின்ற கலிகாலப் பெரியரும் எல்லாம் பொய் பிரமம் ஒன்றே உள்ளது. நாமே அப்பிரமம். நமக்கு, யாதொரு நியமமும் வேண்டா. சுகமாய் உண்டுடுத்து வாழ்தலேதுணிவு. இதைவிட்டு மூர்த்தி தலந் தீர்த்தமென்று ஓடியாடித் துதித்தலறித் திரிவதெல்லாம் துக்கமே என்று பேசி உலகரை வசப்படுத்தி இஷ்டப்படிவாழும் வஞ்சப்பெரியரும், இவ்வுண்மை நோக்கி உய்கவெனத் திருவுளங்கொண்டுபோலும் இறைவன் அருளிய வருணாச்சிரம நியம எல்லைகடவாமல் அவனே ஆண்டவன். நாம் அடிமைகளே. ஆதலால் அவனை யேஎப்போதும் அழைத்தலறி உய்யுங்கள். நான் நன்றுகூறினேன். என்மீது குற்றமில்லை

என்று கருணையால் வற்புறுத்துங் கருத்தினராய்த் தமது நெஞ்சை நோக்கி கூறியருளிய திருவாயென்க. இதனை,

இழைத்தநா ளெல்லை கடப்ப தன்று லிரவினொடு நண்பகலு மேத்தி வாழ்த்திப், பிழைத்ததெலாம் பொறுத்தருள்செய் பெரியோ யென்றும் பிஞ்ஞகனே மைஞ்ஞவிலுங் கண்டா வென்றும், அழைத்தலறி யடியே னுன் னரணங் கண்டா யணியாரூர் வீற்றிருந்த வழகா வென்றுங், குழற் சடையெங் கோனென்றுங் கூறுநெஞ்சே குற்றமில்லை யென்மேனுன்கூறி னேனே. என்பதிற் காண்க.

இறைவனிழைத்த நாளெல்லை கடக்க முடியாதென்ற இதனாலேயே இறைவனியமித்த வருணாச்சிரம தர்மமுதலியவரம்புகளும் கடக்கப்படாது. கடந்தால் மீளாநரகம் பிராப்தமாமென்பது துணிவாமென்க.

இறைவநி னடியர்பல் லாயிர ரொடுமெளி யேனுமொர் குற்றேவல்
இயற்றுவ லருள்கென மறலியி சைக்கினு மேற்றில மென்றுமுனர்
அறைதரு நீயவ னுதையுறு தீமைசெ யாதுய்' மாகருணை
யாலரு ணிறையுமெ யடியவர் பாங்கினு மணுகிலை யணுகிலையென்
நிறைவிரை யாக்கவி யேயொரு பதிகமு நிகழ்வுற வோதலினீ
நிலவுறு மெண்குண முளமென நினையுரை நீதியு ணர்ந்தனமம்
முறைசிவ ஞணைசெய் விறனிறை வாயினின் முத்தம ளித்தருளே
முற்பா வற்புத சொற்பொழி யற்பிறை முத்தம ளித்தருளே. (அ)

மறலி இசைக்கினும் ஏற்றுக்கொள்ளோம் என்று கூறி ஒதுக்கிய நீ அவனிடத்துள்ள இரக்கத்தால் இனிமேலும் சிவபிரானாலுதைபட்டு வருந் துந் தீமை செய்யாதுய்யும்படி யமனே அடியவர் பக்கத்துஞ் செல்லாதே செல்லாதே என்னும் ஆணையை ஒருபதிகமுழுதிலும் விளக்கலால், நாம் எண்குணத்துளோமே என்று நீகூறிய உண்மை உணர்ந்தனம். அவ்வாறு சிவனது ஆணையைச் செய்கின்ற அருள்வலி நிறைந்த திருவாய் என்க. இதனைப் பொதுப்பதிகம் காலபாராயணக் குறுந்தொகை "கொண்ட தொண்டரைத்துன்னியுஞ்சூழலே" என்பது முதலாக ஒவ்வொரு திருப் பாசுரங்களிலுங் காண்க.

வேறு.

அறிவித் தறிந்தே யெவ்வுயிர்க்கு மனவ ரதமு முபகாரம்
அவைக ளிரண்டும் பொதுச்சிறப்பி னருளு முறையிற் பொதுநீக்கி
இறைவன் சிறப்பு முறையென்னை யேது மறிந்தி லன்யானும்
இறையென் றறியே னெனையடியா னெனநே ரறிந்த பின்யானும்

நிறைபே ரருளின் முற்றுணர்ந்து நீங்கா தின்புற் றனனென்று
நிலவு சைவ சித்தாந்த நிகழ்சுத் தாத்து விதவாய்மை
முறைநன் றுணர்த்து செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முதமார் திருநா வுக்கரசே முத்தந் தருக முத்தமே. (சு)

இறைவன், எப்போதும் எவ்வுயிர்க்கும் அறிவித்தலும் உடனிருந்து அறிதலுமாகிய இரண்டும், சாமானியரெவர்க்கும் பொதுவாகவும், விசேஷ பக்குவர்க்குச் சிறப்பாகவும் அருளுமுறையில், என்னைப் பெத்தநிலையாகிய அப்பொதுவினீக்கிச் சிறப்புமுறையிலறிவித்து அறிந்திலனுதலால் நானும் அவனை இறைவனென்றறிந்திலன். அப்பெத்தநிலைநீக்கி முத்திநிலையாகிய சிறப்புநிலையில் அறிவித்து அறிந்தபின் நானும் அவனது நிறைபேரருளால் சிற்றுணர்வொழிந்துமுற்றுணர்வுற்று அனவரதநித்தியானந்தப்பெருவாழ்வு பெற்றனனென்று, சுத்தாத்துவித சைவசித்தாந்த உண்மையை உலகெலா முணர்ந்துய்தற்காகவே தன்னில்வைத்துணர்த்தியருளிய செங்கனிவா யென்க. இதனை, பொதுப்பதிகங்களில் தனித்திருக்குறுந்தொகை

"என்னை யேது மறிந்தில னெம்பிரான், தன்னை நானுமுன் னேது மறிந்திலன், என்னைத் தன்னடி யானென் றறிதலுந், தன்னை நானும் பிரானென் றறிந்தெனே." என்னும் திருமந்திரத்திற்காண்க.

புழுவிற் கடையேன் யானென்று புகறன் முகம னெனுதுண்மை
புலனு கிடநாற் குணமனைய புழுவுக் குளவென் றனக்குமதே
தழுவை யறிவிற் கலைகேள்விச் சத்த வுணர்ச்சிக் குணமென்பாற்
சார்த வின்மை யாலொப்பே சாற்ற லாமென் றிடிலனைய
வழுவில் புழுவுக் கென்பாங்கில் வளர்பொல் லாங்கொன் றேனுமிலை
வாய்மை யிதனுற் புழுவினுநான் வஞ்சக் கடையே னென்றுண்மை
முழுது முலகோர்ந் துயவருள்வாய் முத்தந் தருக முத்தமே
முதல்வ னதிகை வாகீச முனிவா முத்தந் தருகவே. (௭)

(இதனைப், பொதுப்பதிகங்களில் தனித் திருக்குறுந்தொகை.)

"புழுவுக் குங்குண நான்கெனக் கும்மதே, புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கிலை, புழுவுக் குங்கடை யேன்புனி தன்றமர், குழுவுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே." என்னுந் திருமந்திரத்திற் காண்க.

# வருகைப் பருவம்.

அருள்கூர் கயிலை யபரசிவ ஞும்வா
 கீச முனிவருக
ஆழு ரெனுங்கற் பகம்பழுத்த வரிய
 சுவைகூர் கனிவருக
பொருள்கூர் கொடைவே ளாண்குலஞ்செய் புனித
 தவமா மணிவருக
பொருவில் கொறுக்கை யவர்குடிக்கோர் புனைமங்
 கலநல் லணிவருக
ஒருவாத் திலக வதியம்மை யுவக்கு
 மிளஞ்சோ தரன்வருக
ஒளிர்மா தினியார் புகழனு ருயிரின்
 வளர்புத் திரன்வருக
தெருள்கூ ரதிகை மாநகர்வாழ் திருநா
 வரசே வருகவே
தெய்வத் தமிழ்ப்பா வழுதொழுகு திருவாய்
 வரத வருகவே. (க)

அரசு வருக வரசுயச்சா ரண்ணல்
 வருக *அண்ணிக்கும்
அன்பு வருக வன்பர்நுக ரமுதம்
 வருக வமுதமொழிப்
பரமன் வருக பரவியற்சீர்ப் பகவன்
 வருக பகலிரவில்
பண்பன் வருக பண்பயிலும் பாவன்
 வருக பாவனமாண்
சரிதன் வருக சாதவுப சாந்தன்
 வருக சாந்தவெண்டுள்
தாரன் வருக தாரணிசார் சைவன்
 வருக சைவநல
வாதன் வருக வாஞான வள்ளல்
 வருக வருகவே
வாகீ சுரமா தவநிமல மணியே
 வருக வருகவே. (உ)

* அண்ணித்தல்— இனித்தல், "கருப்புத்தூரினு மண்ணிக்கும்" "ஆகமமாகிநின் றண்ணிப்பான்" முதலிய சுருதிகளிற் காண்க.

மூன்னை வினையாற் பவக்கடலின் மூழ்கு
மவர்பின் னருமாழ்ந்து
முடிய வமிழ்த்தும் பாதகரின் மூடித்
திறந்து மயல்பூட்டி
இன்னல் விளைக்கு மாதர்முலை யெனும்வெற்
பிரண்டு மீதாழ்த்த
எழாம லாழ்துன் புறினுமறை யேத்து
மெழுத்தைந் தன்பின்முறை
யுன்னி யுரைக்கின் மிதந்துகரை யுற்றுங்
கமலன் திருவடிவாழ்
வுறுவ ரெனல்காட் டிடக்கல்லி னுலகம்
வியப்ப மிதந்தேறிப்
பன்னு திருப்பா திரிப்புலியூர்ப் பரன்பால்
வந்தாய் வருகவே
பவநோய் மருந்தாம் வாகீச பகவ
வருக வருகவே. (௩)

தன்பா லுறச்சோ பானமெனச் சார்கீழ்
மதத்தர் மேலேறிச்
சைவத் துறலே முறைசைவர் தாழ்வி
னுறல்பா தகம்வினையாற்
புன்பாழ் மதஞ்சார்ந் தொரீஇச்சைவம் புகினு
மதற்குப் பரிகாரம்
புரிதன் முறையென் றுணர்த்திடவே பொன்னு
ரடிக்கோர் விண்ணப்ப
நன்பாப் புகன்று சூலிடப நயக்குஞ்
சிவமுத் திரைதோண்மேல்
நண்ணிப் பெண்ணு கடநகரி னவிறூங்
கானை மாடமெனும்
மன்பார் பரவு திருக்கோயில் வந்தாய்
வருக வருகவே
மாறுக் கருணை வாகீச மணியே
வருக வருகவே (௪)

தூய திருவெண் ணீறிலங்கித் துதைபொன்
மேனித் திருவழகும்
துலங்கு திருக்கண் மணிவடமுஞ் சோதி
பதந்தோய் திருவுளமும்
மேய வுளநைந் துருகிவெளி விரியுந்
திருக்கண் ணீர்ப்பெருக்கும்
விமலத் திருவாய் மலர்பொழியும் விளங்கு
பதிகத் தேன்மழையும்
பாய வடியர் குழாஞ்சார்ந்து பணிந்து
பணிந்து சூழ்நெருக்கும்
பன்னற் கரிய சீர்நலம்பற் பலவும்
பெருக வுலகுய்ய
வாய வதிகைத் திருநகர்முன் வருவா
கீச மணிவருக
மன்பே ரன்பர்க் கின்பருளும் வள்ளால்
வருக வருகவே. (ரு)

வேறு.

கடியார்க்கு மிதழிமுடி யவன்மகிமை நிறைவினுங்
கனியடிய ரைந்து தொழின்முற்
காணுமதி காரவர்ச் சிதரின்ப மொன்றலாற்
கருதிலா மாண்ப ரென்றே
பொடியார்க்கு மேனியிறை வற்குநஞ் சமுதமாப்
போந்ததே லென்று கூறிப்
புல்லமணர் நஞ்சநிற் கூட்டவுண் டின்பொடும்
பொலிந்தநா ணிற்கு றித்தே
அடியார்க்கு நஞ்சமுத மாவதற் புதமோவெ
னருண்மொழித் தேவ ருன்சீர்
அதிமகிமை தேற்றிநீ யமணுற்ற நலன்முனுரை
யதன்மேலும் வற்பு றுத்த
படியார்க்கு நேர்தெரிய வுததிமேற் போந்தான்
பாங்குற்ற பாமன் வருக
பாவனர்க ளோவலற மேவுதிரு நாவரசு
பரசுகோ தயவ ருகவே. (சு)

உயிர்க்குறுதி தருகின்ற சோறெனும் பேரின்ப
முட்டமுத மாகு மன்னம்
உடற்குறுதி தருசாலி யன்னமுண் டூடறிடனி
னுறினுகு மாத லாலிப்
பயக்குறைவி லன்னமொரு வாமலெஞ் ஞான்றுநேர்
பல்குமா நல்கி யீற்றிற்
பகர்வரிய சுத்தாத்து விதசைவ சித்தாந்த
பரபோக வமுத மென்று
நயக்குபே ரன்னமுந் தில்லைநட ராசனித
நல்கனேர் கண்ட வாய்மை
நலனையன் னம்பாலிக் குந்தில்லை யம்பலமு
னவின்மதுர வாக்கி னதனை
வயக்குமா வருளியச் சிற்சபைத் திருமுன்பு
வந்துபணி முதல்வன் வருக
மகிழுழுது முயவருளி னுருவுகொடு வருபரம
வாகீச முனிவ ருகவே. (எ)

நிகமாக மாதிநூல் பரமபதி யென்றோது
நிமலசிவ சுந்த ரம்மே
நிசரூபி யாய்வந்த சிவநம்பி யாரூரர்
நீதிருப் பணிகள் செய்து
தகவாமு மதிகையுண்மி தித்தேக லஞ்சுவன்
றமியனென் றோதி யப்பாற்
சார்ந்தமரி னின்சிவத் துவமகிமை யாவரே
சாற்றவல் லார்க ளயன்மால்
மகவானுமு னுஞ்சமல சிவருனை யன்புடன்
வழுத்தினொரு சிறிது தேர்வர்
மலமற்ற பேரன்ப ருளமுற்று வாழ்கின்ற
வாகீச வின்ப மணியே
சகமேழு முயவென்று நரரூபி யாய்வந்த
சாந்தபர நாதன் வருக
சைவநிலை நிறுவியுயர் தெய்வமிது வெனவெளிசெய்
தமிழ்வேத முதல்வ ருகவே. (அ)

சிவபாத விருதயர்செய் தவவாய்மை பயனுறுதல்
செயவேத னிளைய சேயைத்
திருக்கயிலை நாதனவர் மகவினுறு கென்றரு
டிறத்தினைம ரும லனைய
சிவைநாத னக்கயிலை யினின்மேவு கோலநேர்
திகழுவிக் காழி நகர்மேல்
திருத்தோணி யமர்தலாற் பிரிவின்மை நோக்கிவரு
சேயைநேர் கண்டி றைஞ்சச்
சிவமேவு நீவருத லோர்ந்தனைய சேயுனைச்
சேய்மையி னிறைஞ்சி முன்னூன்
செய்தவம் பெரியதென் றணுகியப் பாவென்று
திருவாய்ம லர்ந்து நீயச்
சிவமேயென் வாய்மையா வருமுணர நேரழைத்
திடவந்த தேவன் வருக
தேவர்முனி வோர்பரசு நாவரச நாமபர
சிவமுதவு முதல்வ ருகவே. (கூ)

புகலூரி னுடனமர்ந் தேகுகா னீயுடன்
போதலாற் காழி வாழ்சேய்
புரவயிரி யிதிலிவர்ந் தென்றுநீ செல்கென்று
புகலானை யுங்க டந்து
தருபாத மலர்கன்ற வவனியின டப்பநீ
சகியாம லைய விந்தத்
தாளவண் சிவிகையினி வர்ந்துவரு கென்றுரைசெய்
தனியானை மாற்ற லரிதாய்
அகமேவு மன்புபெரு கப்பர்நீ ரெங்குறுவ
தங்குமுன் சென்றி டிற்பின்
ஆண்டுறுவ னெனவேண்டி யாங்குநீ யுடனூரு
தகன்றபின் சிவிகை மேற்சென்
றிகவாநின் மகிமைநல னுலகோர வருளவவ
ணெய்துவா கீச வருக
இன்பமுழு தும்பாவி முன்பணியு மன்பருற
விம்பர்வரு முதல்வ ருகவே. (௰)

# அம்புலிப் பருவம்.

நிலவுகர மகரவக ரப்பரையர் மேலதிகை
நீடலம் பரவ வருவாய்
நிலவுகர மகாவக ரப்பரையர் மேலதிகை
நீடலம் பரவ வருவான்
வலனினுழ வாரங்க மலகரமி சைக்கவரு
வாய்பயிர்க் குறுக ணீங்க
வலனினுழ வாரங்க மலகரமி சைக்கவரு
வானுயிர்க் குறுக ணீங்க
நலனுரைசெ யினையசொற் பொருட்சிலே டைத்திறனை
நாடியே யெங்க ளாமூர்
நாயகனை நேயர்பணி தூயவனை நீயுறமு
நயமுரைத் தினித மைத்தாம்
அலகினமை யாதசிவ நலனருளு நாதனுட
னம்புலீ யாட வாவே
அருமறையி னுரியபொருள் பரவு தமிழ்
தருமரசொ டம்புலீ யாடவாவே. (க)

அம்புலியே! நீ, நிலவு கரம்—நிலவாகிய கிரணமானது, மகர வகர் அப்பு அரையர்மேல்—மகர வாகனத்தை யுடையரும் அப்பின் அரசருமாகிய வருணர் மேல், (கடலின்மேல்) அதி கை நீடு அலம் பரவ வருவாய்—அதிகமான ஒழுங்கு (வரிசைகள்) நீடுகின்ற நிறைவு பரம்ப வருவாய். (எங்கள் நாவரசாகிய இவன்) நிலவு உகர மகர அகர பரையர்—விளங்குகின்ற உகரம் மகரம் அகரம் மூன்றும் சேர்ந்து உமா என்று கூறும் பரையை உடைய சிவபிரானது. அதிகை நீள் தலம் பரவ வருவான்—திருவதிகையாகிய (மகிமை) மிகுந்த தலத்தில் (யாவரும்) துதிக்கும்படி வருவான். நீ, வலனின் உழவார் அங்கு அமல் அகரம்—வலிமையாக உழுதலைச் செய்கின்றவர்கள் அவ்விடத்துப் பொருந்திய அகரங்கள் (ஊர்கள்) இசைக்க—(உன் வரவு நோக்கி) பாராட்டும்படி. பயிர்க்குத் துன்ப நீங்க வருவாய் (இவன்) உயிர்களுக்குத் துன்பம் நீங்கும்படி வலப்பக்கத்தில் கமல கரமிசை உழவாரத்தைக் கவருவான். (கிரகிப்பான்)

இரவனென வருவைநீ யினமெயடி யவர்பலா
யிரவனென வருவ னிவனும்
இயன்மதியெ னப்படுவை நபனிலவு சிவநிறைந்
திலங்குமதி யினனி வனுமம்
பரமிசைப் பதிகனீ யருமறைசொ லுஞ்சிதம்
பரமிசைப் பதிக னிவனும்
பனியமுத மீவைபண் ணவர்க்குரிய பண்ணவர்கள்
பணியமுத மீவ னிவனும்
விரவிரவி யுள்ளுறுவை நீயிவன் கயிலாய
வெள்ளிரவி யுள்ளு றுவனே
விளம்பினைப சொற்களொற் றுமையளவி னீயிவனை
விழைவையென நன்ற மைத்தாம்
அரவொடுனை யணிசடில னருணிறைசொல் லரசினுட
னம்புலீ யாட வாவே
ஆசறுமெய் நேசர்புகழ் பேசுசிவ தேசிகனொ
டம்புலீ யாட வாவே. (௨)

நீ, அம்பரமிசைப் பதிகன்—ஆகாச மீது வழிச்செல்வோன். இவனும், சிதம்பரத்தில் இசைப் பதிகம் பாடினவன். நீ, பண்ணவர்க்கு—தேவர்க்கு அமுதமீவை. இவன், பண்ணவர் பணிய—முனிவர்கள் வணங்க முதமீவன் முதம்—இன்பம். வெள் இரவி—மலே. விழைதல்—ஒத்தல்.

ஒப்பாரு மிக்காரு மில்லாம லெஞ்ஞான்று
மொருபடித் தாகி நின்றே
ஒளிருமா நாதனருண் முழுதுமார் வாலனைய
வொருவனே யலது மற்றை
எப்பால ருமொவ்வ தீதவா கீசசிவ
னிவனைநீ யொப்பா யென
இசைத்தவுப சாரமோ ராமலிறு மாந்தனைகொ
லினையதுர்ப் புத்தி யொழிதி
இப்பாருய் வான்மகவின் வந்தமைக் கிசையவுல
கியல்பினீ யாட வருமா
இதமொழிபு கன்றனம ஞெளியையிரு ளொத்திடினு
மிவனைநீ யணுவு மொவ்வாய்
அப்பான்மை யினியேனு மோர்ந்துவிரை வுற்றிவனொ
டம்புலீ யாட வாவே
ஆனடிசெல் பாவனர்கள் பரவுதிரு நாவரசொ
டம்புலீ யாட வாவே. (௩)

நிலவெங்கும் வீசனின நலனென்று பேசியதை
நிசமென்று † தேறல் கேணின்
நிலவென்று முளதன்று வதுவன்றி யுடலின்ப
நிலைதந்து நிகழ்வ தல்லால்
நலனென்று முயிரின்ப மதனின்க ணிலையெங்க
ணவிலின்சொ னுவி னரசின்
நவையின்றி யொளிர்கின்ற திருவங்க மிசைதுன்றி
நயமுந்து நீற்றி னொளியே
உலகின்க ணுறுகின்ற புறமொன்று மிருளுந்த
முளனைந்து கண்டு பணிவார்
உளமண்டு மிருளுங்கொ னிலைநின்று பிரிவின்றி
யொளிர்கின்ற தெந்த ஞான்றும்
அலகின்றி நிகழிந்த நலனென்று மூணர்வொன்ற
வம்புலீ யாட வாவே
அருள்கொண்டு மகியின்ப முறவந்த தலைவன்க
ணம்புலீ யாட வாவே. (௪)

பரவிருளி ரித்தொளிசெய் யினுமிரவ னென்பெயர்
பரித்திநீ யெங்க ளரசு
பழமறைமு னைபுகல் வாகீச நாமம்
பரித் * தொளிரு மீச நாமப்
பொருளுயிர்கள் யாவும்வேண் டியவளித் தவையடிமை
புரியவுய்த் தாள லென்றே
புகலுநா னீயிருளி ரிக்குமொளி யனையமறை
போற்றுமீ சன்க ணீமுன்
இரவலிற் பெறுதலா விரவனெனு நாமமெய்
தினையிதுவு மோர்ந்தி லாயோ
இலக்குமொளி நிற்கருளு மீசனியன் முழுதுமார்ந்
திலகுவா கீச னிவன்சீர்
அருமையினி யேனுமுணர் நிலைமையின னுயிவனொ
டம்புலீ யாட வாவே
அதிகபர மாத்தசிவ கதியுதவு தீர்த்தனுட
னம்புலீ யாட வாவே. (௫)

† தேறல்—தேறுதே.

* ஒளிரும்—ஒளிருவன்.

மதியெனும் பெயருடைய மென்றனைம தித்தனைகொன்
மதியிலா தவரு மென்றும்
மதித்திடா விழிசெய்கை குருபன்னி பாற்செய்த
மதிகேடு கோடி நின்றீ
மதியிதுநின் னெஞ்சறியு மெங்கள்வா கீசநிறை
மதியுடற் களங்கு மிலதே
மதிவதன வரமகளிர் வலிதுவந் தளவில்வகை
மயல்காட்டி யிர்ப்ப வுந்தன்
மதிசலன மின்றியவர் முகநோக்கு மின்றிவினை
வகைகாணு மக்கு நம்பால்
மதிமயக் குஞ்செயல்கள் யாதுமிலை யேகுமினென்
மாறில்கெம் பீர வாக்கின்
அதிவலிப காமாரி யிவனெனுமெய் நீபேணி
யம்புலீ யாட வாவே
அலர்புகழ ஞர்மகவி னிலனின்வரு சீரசொ
டம்புலீ யாட வாவே. (௬)

ஒருகணமு மோரிடத் துறலின்றி யந்தரத்
தோடியுலை கிற்றி யிவ்வா
றொருநாளு மொழியாம லுலைதலா லுன்னுயிர்க்
குறுதியா தேனு முண்டோ
திருமறைசொல் வாகீச நாமவாச் சியனெமது
திருநாவி னரசு தூய
தேசுதிகழ் வெண்ணீறு பூசியொளிர் பொன்மேனி
தெரிசன னந்தம் வாய்ப்ப
மருவிலிவ ணின்னுலைவு முதலியபல் விடரெலா
மாற்றியுலை யாம லென்று
வாழுநிலை யின்பருள்வ னூமொருவு நன்புறுதி
மதியுனக் குறுதி யீதே
அருமறையின் விரிபொருண்மெய் தெரிதமிழ்செய் குரவனுட
னம்புலீ யாட வாவே
அவனியுய வதிகையினி லதிபுணிசெய் யரசினுட
னம்புலீ யாட வாவே. (எ)

பிறர்க்கினு முற்பகற் செய்தவர்த மக்கினு
பிற்பகலி னுறுத ருனே
பேசுநூல் வாய்மைநல னோாது குரவற்பி
ழைத்ததீ தாதி யாய
திறற்கொடிய பாதகனீ யாதலாற் சேண்மீது
சிதநில வுயிர்க ளின்பஞ்
சோநல் குனையுமிப் பாரினுங் கீழதிக
செய்நிலைய வரவ மொன்று
மறைத்தலையு மாற்ருது நைந்தொடுங் குதியுயிரும்
வவ்விய விடந்து ரந்தோர்
மகனெழவோர் வாக்கருளெம் வள்ளல்பால்
வரினினது துன்ப முற்றும்
அறக்கருணை புரியுமொரு வருமின்பு முறுவைநீ
யம்புலீ யாட வாவே
ஆமூரின் மீவாழும் வாகீச மாதேவொ
டம்புலீ யாட வாவே. (அ)

நமக்குமே லில்லைநா மேபிரம மெவர்கட்கு
நாமடிமை யல்ல மென்றே
நவில்குநரும் வாகீச சிவனுமி வன்செய
னயந்தடிமை பேணி யுய்வான்
உமைக்குநா யகனருளின் முத்திநிலை யுற்றுவாழ்
வுறுமங்கு மஞ்ச லித்தே
உயிரென்று மடிமையாண் டவனமல சிவனென்னு
முண்மைகாட் டுரிய செங்கை
இமைக்கநீட் டுபுநிணைய ழைக்கவா ராமையா
லெமதுபர சாந்தன் முனிதல்
இலன்பலா யிரரிலோ ரடியர்முனி வுறினுய்த
லெங்குமிலை நின்சி ரத்தில்
அமைக்கும்விதி யதுவாகி யுலைவைநீ யலையாம
லம்புலீ யாட வாவே
ஆவின்வரு தேவன்மகிழ் பாவருளு நாவரசொ
டம்புலீ யாட வாவே. (கூ)

மிடல்வலிச் சூருரம்பி ளந்தவேற் குமரனே
மேதினியுய் வான்பு கலியில்
மேவுசே யப்பரே யென்றழைத் துரிமையை
விளக்கிநேர் போற்று விமலன்
தடமகிமை யோர்ந்திலைகொல் வாளாவி ருத்தியித்
தன்மையச் சேய றிந்தால்
சார்புவே றெங்குமிலை நிற்கினிக் கழுவேறு
தண்டமே தலையெ ழுத்தாம்
மடமையம ணாதர்களி வற்கிடர்செய் முன்னைநாள்
வன்கழுவி னேறி மாய்ந்த
வாய்மைகேட் டிலைகொலினி யேனும்விரை வாயோடி
வந்தடிவ ணங்கி லுய்வாய்
அடல்விடைய னருள்பெறுபு புடவியுய வருமரசொ
டம்புலீ யாட வாவே
அமலசிவ பதமிதய கமலமலர் முதல்வனுட
னம்புலீ யாட வாவே. (ய)

---

## சிற்றிற் பருவம்.

---

மணிமா ளிகைக ணிரையிருபால் வானுங் கடந்து மேற்சென்று
வயங்க வம்பொன் மாரதங்கள் வரிசை விரைந்து செலவிரிந்த
அணிமா மறுகோர் பாலொதுங்கி யவிரு மணிபற் பலவகையின்
அரிது நுணுகிச் சிற்றிலங்க ளமைக்குஞ் செயலின் மதிபுகலால்
கணியார் நினது திருவெழுச்சி காணுந் தவமில் பேதையரேங்
கண்டு தருக்கி யிருந்திலமிக் கரிசு சிறிதுந் திருவுளத்தில்
இனியா யுருதிப் பிழைபொறுப்பாய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணும் பரவுந் திருவாமூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

அறியாச் சிறியர் பிழைபொறுத்தி னருண்மேற் செயலான் றவரியல்
பதனை விளக்கு முபசாந்த வரசு நீயா தலினன்றே [பென்
பிறியா துடன்சார் நினக்குமிடர் பெரிதாற் றமண ரப்பொழுதே
பேதுற் றெழியப் புரியாற்றல் பெற்றும் புரியா துணர்ந்தரசக்
குறிமாற் றுபுதண் டனையாலக் குற்றத் தீர்வு செயவுகந்த
குணபூ தரநீ யாதலினெங் குற்றம் பொறுத்திங் கருடியெனச்
சிறியே முரைத்தன் மிகையாமா தேவா சிற்றில் சிதையேலே
சிவமார் திருநா வுக்கரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (உ)

அண்டப் பகுதி யாம்பெருவீ ‡டம்மை யியற்றுந் தொறுமனைத்தும்
அழித்து நடஞ்செ யரனருளா லவனே தானே யாகியநீ
தொண்டத் தலைமை வகித்தடிமைத் தொழிலே புரிந்து வந்துமவன்
தொழிலு மேற்கொண் டோவெளியேக் தொடங்கி விழைந்து பன்மணிகள்
கொண்டத் தொழிலின் மனம்புகுத்திக் குயிற்றுஞ் சிற்றில் களுமழித்தி
குறைவி லாற்ற னின்சாந்த குணமாண் பினுக்கீ தழகாமோ
திண்டத் துவங்கள் கடந்தொளிருந் தேவா சிற்றில் சிதையேலே
தெய்வத் திருநா வுக்கரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௩)

‡ அம்மை—உமையம்மை.

எளியேக் தவமோர் வியாசமே யிம்ப ருயுமா சிவனருளே
எம்பான் மகவின் வந்ததென வினிது போற்று மாதினியார்
அளிநீ ராட்டித் திருவெண்ணீ றணிந்தின் சுவையூ ணருத்திமணி
அணிகள் புனைந்து மகாரியல்பி னுடைவிடுத்த தெம்ம வர்கள்
களியோ டியற்று சிறுவீடு களைச்செவ் வனசத் திருவடிகள்
கன்ற வுழக்கிப் புழுதியியற் கவினை மறைத்து மேலுறற்கோ
தெளிகூ ரன்ப ருளத்தொளிருந் தேவே சிற்றில் சிதையேலே
திருவா மூர்வா கீசசிவ சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௪)

சிவமா நம்பி யாரூரர் திகழப் பூதி யடிகளார்
சேக்கி ழார்கோ னுமாபதிமுற் சிவாநு பூதிப் பெருஞ்செல்வர்
தவமார் செம்மை யேபுரியுந் தனிநா வரசென் றுவந்துபணி
சாந்த தூய சிவகின்பாற் றமியேம் புரிவீ டழித்தாயென்
நவமார் கோண லுறலழகோ நண்ணற் கரிய பெருவீடு
நாடித் தொழுவார்க் கெளிதருளு நலனே நினதோ ரியல்பென்ப
திவா மூரின் வாகீச தேவே சிற்றில் சிதையேலே
சிவமே நிலவு திருமேனிச் செல்வா சிற்றில் சிதையேலே. (௫)

நம்பி, "திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட" என்றும், அப்பூதி, "செம்மைபுரி திருநாவுக்கரசர்" என்றும், உமாபதி, திருமுறை கண்டபுராணம் (கரு) திருவிருத்தம் "திருநாவுக்கரையரெனுஞ் செம்மையாளர்" என்றும் உவந்து பணிகின்ற சாந்தஎன்க.

சிவனே பதியே னையர்பசுக்க டேற்ற மிதுவே பசுபதிப்பேர்த்
திறத்தோர் கெனமெய் வேதாந்தந் திகழ்த்துண் மையுமோ ராதந்தோ
சிவமார் சைவ விரோதிகளாய்ச் செகத்தை மயக்கித் தம்மதமே
திரனு யெளிதின் முத்தியுறு செம்மை நெறியென் றுரைத்தீர்த்துச்
சிவமாண் விலக்கும் பாதகர்கள் சேர்ந்து களிக்கும் வசதிகளைச்
சீத்தன் னவர்பொய் மதமிகைகள் சிதைக்கு மதுவே நினக்குமுறை
சிவமே பேணுஞ் சைவநெறிச் சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செம்மை யேசெய் நாவரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௬)

வேதா கமவை திகசைவ மேற்கொண் டொழுகுஞ் சீலர்பலர்
மேவி யிருந்து தத்தமக்கு விதித்த திருத்தொண் டின்வகைகள்
கோதார் வுறும விடரின்றிக் குயிற்றி நாளு மின்புறுவான்
குலவு திரும டாலயங்கள் குறையா நிதியத் திருக்கோயில்
போதார் நந்த வனமுதலாப் போற்று சிவதன் மங்கள்பல
புரிந்து பேணுந் திருப்பணிக்குப் புன்மை யேஞ்செய் சிறுவீடு
தீதா கிலவே யருணிறைந்த தேவே சிற்றில் சிதையேலே
திருநா வரசென் பெருநாமச் செல்வா சிற்றில் சிதையேலே. (௭)

அனைத்து மழிப்ப தரன்செயலே யதனா லவனே யாயொளிர்நீ
அதைமேற் கொண்டே யெஞ்சிறுவீ டழிக்கின் றனைகொ லங்ஙனமேல்
வினைத்துன் பகற்றி யருளவனே மீட்டுஞ் சிருட்டித் தோம்புதல்போல்
வினையேஞ் சிறுவீ டழித்திடுநீ விளம்பு மனைய வீடெல்லாம்
பினைத்தந் தெளியேங் களிகூரப் பேணு மதுவுஞ் செயன்முறையாம்
பின்ன ரிதுசெய் யாதுமுனர்ப் பேசிற் றொன்றே செயன்மரபோ
தினைத்து ணையுநன் முறைதிறம்பாச் செல்வா சிற்றில் சிதையேலே
தேவர் பரவு நாவரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௮)

சுகந்த மலரா தியவமைத்த தூநீ ராட்டி விரைந்தீரஞ்
சுவறா தொற்றா டையின்மாற்றி சுண்ணந் திமிர்ந்து வெண்ணீற்றை
உகந்து புனைந்து மணிப்பணிக ளொளிர்வித் தெழில்கண் ணேறுபடா
தொண்க போல திலகமுந்தந் துச்சி மோந்து முத்தமுங்கொண்
டிகந்தி டாதா ருயிரினுமோம் பிடுதாய் நின்சே வடிநிலந்தோய்
இதற்கே சகியாள் புழுதியுந்தோய்ந் திடின்மேன் மேலு மென்படுவாள்
திகந்த மொளிருந் திருவாமூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே
தென்சொல் வேத நாவரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௯)

அருளா ரமுதே யமுதுளூறு மரிய சுவையே சுவைநுகரும்
அன்பே யன்பர்க் கின்பருளு மரசே யரச ருவந்துபணி
பொருளே பொருளென் றுலகிறைஞ்சற் புதமே யற்பு தங்கள்பல
புரியுஞ் சிவமே சிவந்தருமெய்ப் போத மேயப் போதமருள்
தெருளே தெருள்கூர் சித்தாந்த தேவே தேவ ரெலாம்பரவு
சிந்தா மணியே மணியில்விரி தேச மேதே சங்கடந்த
திருவே திருவா மூர்வாழுஞ் செல்வா சிற்றில் சிதையேலே
திங்க ளூரப் பூதிதொழு தேவே சிற்றில் சிதையேலே. (௰)

# சிறுபறைப் பருவம்.

உலகர்காண் மருவுமெய்ப் பயனற்ற பசுநூல்க
ளோதியொழி யாதும் வாழ்நாள்
உயர்பரம பதிநூல்க ணிகமாக மங்களே
யோதுதமிழ் வேதங் களே
நிலவுமவை போற்சிவ பாத்துவவி ளக்கமே
நிறைபுரா ணாதி நூலே
நீவிர்மேற் கொண்டவைக ளோது சரியாதியா
நிகழ்திருத் தொண்டு பூண்டு
விலகுறு தவைதொடர்பின் மேன்மேலி யற்றியருண்
மெய்ப்பயன் பெற்று வாழ்மின்
விதியிதென வோர்த்தெவரு முய்யநீ தமிழ்வேத
மேதகமு ழக்க லென்னத்
திலகமென மகியினில வதிகையமர் மொழியாசு
சிறுபறைமு ழக்கி யருளே
தீதமண ரோதுநெறி காதவரு நீதிமுனி
சிறுபறைமு ழக்கி யருளே. (௧)

போற்றுபதி நூலெனினும் வேதமுல கர்க்கெலாம்
பொதுவினவர் பருவ பேத
போதநிலை நோக்கிப்ப லர்க்கும்ப ரத்துவம்
புகலுமவை யுபசா ரமே
சாற்றுண்மை சிவபரத் துவமதே யிதனையச்
சதுர்மறையி னாதி யந்தந்
தருதியே யச்சொன்முத லோர்க்குமவை பச்சிலக
டம்முண்மறை காய்க ளென்ன
வீற்றுவீற் றுளிர்தலான் மந்தருக் கரிதாமவ்
வேதத்தி னுண்மை யனைய
விமலனே பாடியம தென்னவரு ளாகமவி
சேடநூல் புகலு நெறியே
தேற்றமென நன்முழக் கஞ்செய்தமிழ் வேதநீ
சிறுபறைமு ழக்கி யருளே
சிவனடிநின் முடியிலருள் வுழிமகிழ்தென் மொழியாசு
சிறுபறைமு ழக்கி யருளே. (௨)

வேதநவில் பொதுநிலைய வுபசாரம் யாவையும்
விடுத்துண்மை யொன்றை யேசொல்
விமலனு கமமுறைச் சமயதீக் கையைமேவி
விடியன்மு னெழுந்து மூழ்கிப்
பூதிமணி பூண்டுசெப முதனியதி புரிபுதளி
புக்கலகு திருமெ ழுக்குப்
பூப்பணிமு னுயசெய லேசரியை யிம்முறைபு
ரிந்துய்க தீக்கை யின்றி
ஆதியம லன்கோயி றீர்த்தநந் தனமடா
லயமேக றீமை யென்னும்
அம்முறைவி ளக்கு*நிலை பெறுமாறு முற்பதிக
மருளியெங் கணுமு ழக்குஞ்
சீதவய லாமூரின் மீதொளிரு மாதேவ
சிறுபறைமு ழக்கி யருளே
செந்தமிழின் முந்துமறை தந்தருளு மந்தண்முதல்
சிறுபறைமு ழக்கி யருளே. (ங)

* "நிலைபெறுமாறெண்ணுதியேல்" என்பது முதலிய பதிகங்கள்.

அருளிலக் கணமுற்று முறுகுருவை யாய்ந்தடி
யடைந்துசம யம்வி சேடம்
ஆயசிவ தீக்கையொடு பெறுசிவவி லிங்கமுத
லர்ச்சனைவ ழாம லென்றுந்
தருமுறைசெய் துய்கவதன் முன்புனலு முண்ணற்க
தவறல்பா தகமென் வாய்மை
தனை †யுண்ப தன்முன்மலர், மலர்பறித் திட்டு,மலர்
தனிதூவி, பூநீ ருள,
வருசலம் பூவொடுமு னுயபல வாக்கினரு
வம்முருவ மேனி நோக்கி
வயங்ககம் புறஞ்செய் தொண்டாயசிவ பூசைநிலை
வாய்ந்துலக முயமு ழக்கித்
திருவருள்செய் தொருவில்சிவ கிரியைமுறை தருமரசு
சிறுபறைமு ழக்கி யருளே
சிவருபு மாவரிய பாவருளு நாவரசு
சிறுபறைமு ழக்கி யருளே. (ச)

† "ஒருகாலுந் திருக்கோயில் சூழாராகி லுண்பதன்முன் மலர்பறித் திட்டுண்ணு ராகில்" "அருப்போடு மலர்பறித்திட் டுண்ணு ராகில்" "தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று" "இட்டுக்கொள்வன நீருள பூவுள" "சலம்பூவொடு" முதலிய பற்பல சுருதிகள் சிவபூசனைக் கிரியைத் தொண்டு விளக்குதல் காண்க.

இடம்வலத் துறுவளிதடுத்திடைச் சுழுனைநெறி
யேற்றிமூ லாங்கி யிணைமேல்
எழுப்பிமதி யமுதமுண் டருவமே னியைநோக்கி
யேயகத் தாற்று தொண்டாம்
நொடிவில்சிவ யோக *முபி ராவணமி ருந்துற்று
நோக்கியெனும் வாக்கு முதலா
நூவன்றுலகெ லாமுணர்ந் தோதுமத் தொண்டுநிலை
நோன்றுபமு ழக்கு முதலே
தடமலர்ப் பொழிலூடு மடமயிற் குலமாடு
தலைநோக்கி வானின் மாதர்
சமழ்ப்புற்று வந்துடன் பயின்றிமைப் பில்விழிக
டம்மின்வே றன்மை காட்டும்
திடவளந லாமூரி னிடைவளரு மாதேவ
சிறுபறைமு ழக்கி யருளே
சிவமணந் தருமினிய தமிழுவந் தருளரசு
சிறுபறைமு ழக்கி யருளே. (ரு)

* "உயிராவணமிருந்துற்றுநோக்கி" என்பது முதலிய சுருதிகளால், யோகத்தொண்டு விளக்குதல் காண்க.

புறமகம் புறமகமெ னப்பகுத் துணருமப்
போதமற முற்ப டாதெப்
பொருளுமொழி யச்சிவம தேதோன்ற வத்துவித
புனிதசிவ போக நிலைசார்
நிறைநலன் பெற்றுவாழ் வுறவருள்செய் சிவஞான
நிலையினின் றுலக முய்வான்
நிகழ்ஞான நூல்கேட்டல் சிந்தித்த றெளிதல்பர
நிட்டையினி யல்பெலாமும்
முறைநிகழ முன்னமவ னுடையநா மங்கேட்டன்
முதலதிரு வாய்ம லர்ந்து
முழுச்சுவைய தமிழ்வேத திவியவாக் கியம்பலமு
ழக்கியருள் பரம குரவ
சிறையளிக ணறைபருகு பொழிலதிகை தழுவரசு
சிறுபறைமு ழக்கி யருளே
திகழுமா தினியார்சொல் புகழனூர் தனிவாழ்வு
சிறுபறைமு ழக்கி யருளே. (சு)

சரியையாளர் சமயதீக்ஷை பெற்றுப் புறத்தே உருவத் திருமேனி நோக்கிச்செய்யுந் தொண்டர். கிரியையாளர், சமயவிசேட தீக்ஷைபெற்று

அகத்தும் புறத்தும் அருவுருவத் திருமேனி நோக்கிச் செய்புந்தொண்டர் யோகிகள், அகத்தில் அருவத் திருமேனி நோக்கிச் செய்யுந்தொண்டர் ஞானிகள், ஞானசாரியர் முகமாகச் சமய விசேட நிர்வாண தீக்ஷை பெற்றுப் பற்றற்றுநின்று புறம், அகம்புறம், அகமென்று பகுத்துணரும்போதம் தானே நழுவ உலகப் பொருள்களொன்றுந் தோன்றாது சிவமேதோன்றக் கண்டு இரண்டறக்கலந்து வாழும் சுத்தாத்துவித போகநிறை நலன் பெறத்தருவதாகிய சிவஞானநிலைத் திருத்தொண்டராவர். உலகெலாம் இச்சிவஞான நிலையினின்றுய்யும்படி, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டையாகிய நால்வகைச் சிவஞானத்திருத் தொண்டின் இயல்பெல்லா மும் முறையே விளங்க,

"முன்ன மவனுடைய நாமங் கேட்டாண் மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள், பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள் பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள், அன்னையையு மத்தனையு மன்றே நீத்தா ளகன்றாளகலிடத்தா ராசா ரத்தைத், தன்னைமறந்தாடன் னாமங்கெட்டாள் தலைப் பட்டா ணங்கை தலைவன் றாளே." என்று தமிழ் வேதவாக்கியங்கள் முழக் கியருளிய பரமகுரவ யென்க.

இத்திவ்விய சுருதியில், ஆரூர் கேட்டாள் என்றவரை கேட்டலும், பிச்சியானாள் என்றது சிந்தித்தலும், நீத்தாள் ஆசாரத்தை அகன்றாள் என்றவை தெளிதலும், தன்னை மறந்தாள் நாமங் கெட்டாள் என்றவை நிஷ்டானுபூதியும் உணர்த்துவதாக விரித்து விளக்குவார் மேலையோர்.

ஓதுமன மணியிலிங் காதிதிரு வாக்கினு
　　லுட்பூசைவி ளக்கு நீயவ்
வொன்றமையு மென்றுசிலர் வைகறையெ ழுந்துபுன
　　லுண்மூழ்கல் போது கொய்தல்
ஆதிதொழி லாலுடல்வ ருந்தாது நினைதொறு
　　மருந்தாதி செய்து வாழ்வான்
அகப்பூசை புரியுநா மயற்பூசை வேண்டாமெ
　　னப்புகலும் வஞ்சர் தாமுங்
கோதறப் புரிந்துயத் தூயகா விரியினீர்
　　கொண்டிருக் கோதி யாட்டிக்
குங்குமக் குழம்பணிந் தென்சுருதி யாணைநனி
　　குலவுறமு ழக்கி யோர்க்குஞ்
சேதனர்ப ராவுபர போதசுப நாவரச
　　சிறுபறைமு ழக்கி யருளே
திலகவதி யார்மகிழ்வொ டிலகுமுறை பேணிவளை
　　சிறுபறைமு ழக்கி யருளே. (எ)

"காயமே கோயிலாகக் கடிமன மடிமை யாக, வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக, நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப், பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே." என்று நீ அகப்பூசனைமுறை விளக்குமதனை மாத்திரம் நோக்கிச் சில சோம்பேறிகள் அதிகாலையில் நித்திரை விட்டெழுதல், முழுகுதல், பூக்கொய்தல் முதலிய தொண்டுகள் தினந்தோறுஞ் செய்து உடல் வருந்தாமல், நினைத்த நேர மெல்லாம் உண்டு சுகிக்கக்கருதி முழுவஞ்சகராய், நாம் அப்பர் கூறியபடி அகப்பூசை செய்கின்றோ மயற்பூசை வேண்டாமென்று புகன்று மேற்காட்டியபடி, ஊர்ப்பொதுவாய் அவ்வூரார் யாவரும் பேணுகின்ற பொலி எருதுகளாய்த் திரிந்து பாழ்நரகிலாழாமல் இரக்கத்தால் அவர்களும் வஞ்சமின்றி அகத்தும் புறத்தும் அன்புடன் பூசித்துய்கவெனத் திருவுளங்கொண்டு,

"தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியி னன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
இண்டைகொண் டேற நோக்கி யீசனை யெம்பி ரானைக்
கண்டனைக் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே." என்றல் முதலிய திருவாணையை எங்கு முழக்கி அறிவிக்கின்ற நாவரச என்க.

## வேறு.

ஒருபான் புராணப் பதிகத்தா லுண்டன் முடிநீ ராற்றன்முடி
ஒளிர்தா ளிருவ ரறியாமை யொன்றாய் மூன்றா யறுசமய
பரனா யுலகுண் டாலிற்கண் படைமாற் சேர்ந்து விதிமகனைப்
பயந்த விடர்செய் தாரகனைப் படுத்தல் புரமாய்த் தியமனுதைத்தல்
கரிசார் மகஞ்சாய்த் திடலுமைதன் கண்மூ டலிற்சா ரிருளை நுதற்
கண்ணா லொழித்தன் மதற்றகித்தல் கண்ணற் காழி தரன்முதலா
முரியாப் பரத்து வம்முழக்கு முதல்வா முழக்க சிறுபறையே
முதிய வதிகைப் பதியரசு முழக்கி யருள்க சிறுபறையே. (அ)

ஒருபான் புராணப்பதிகத்து—தசபுராணப் பதிகத்தில். ஆலுண்டல்—விஷமுண்டலும், முடியில் கங்கையைத் தாங்கலும், முடியுந் தாளும் இருவர் அறியப்படாமையும், ஏகனாயிருந்தே மூவடிவனாய் ஆறுசமயத் தலைவனாதலும், உலகை உண்டு ஆலிலையிலுறங்கும் மாலைச்சேர்ந்து விதியாகிய மகனைப்பெறுதலும், தாரகனை வதைத்தலும், புரமெரித்தலும், யமனை உதைத்தலும், கரிசு ஆர்மகத்தை அழித்தலும், தன் கண்ணிரண்டை உமையம்மை மூடிய போது சூரிய சந்திரரிருந்தும் எங்கும் பரந்த இருளை நெற்றிக்கண் விழித்து நீக்கலும், மன்மதனை எரித்தலும், அரிக்குச்சக்கரங் கொடுத்தலு முதலிய சிவபரத்துவ நிலைகளை அப்பதிகமுழுதிலும் முழக்கு முதல்வ என்க.

ஈர விறகி னுலர்ந்தவிற கினிற்றீ பாலின் வெண்ணெயி னெய்
எனவே மந்த தரர்மந்த ரிசைதீ விரர்தீ விரதரருக்
காரும் பருவ வளவின்முறை யாய்நின் றருள்வன் மணியொளியின்
அகில மெங்கு நிறைந்தொளிரு மரனைப் பரனை யவனருளால்
நேருந் தலையன் பவனடியி னிறுத்திச் சலியா தவன்ஞான
நிலையி னோக்கின் முன்னிற்ப னிசமோர்ந் துய்க வெனமுழக்கும்
மூரி ஞான சிவகுரவ முழக்கி யருள்க சிறுபறையே
மூவர் புகழு நாவரசே முழக்கி யருள்க சிறுபறையே. (க)

மணியின் ஒளிபோல் எங்கும் நிறைந்த சிவபிரான், மந்ததரர்—அதிக மந்த பக்குவர்க்கு. ஈர விறகில் அதிக மறைவாயிருக்கின்ற தீயைப்போல வும், மந்த பக்குவர்க்கு உலர்ந்த விறகிலுள்ள தீயைப் போலவும், தீவிர பக்குவர்க்குப் பாலிலுள்ள நெய்போலவும், தீவிரதரபக்குவர்க்கு, வெண் ணெயில் விளங்கு நெய் போலவும் நின்றருளுவன். அவனை, அவனருளால், அசையாமல் உறைத்து நிற்கும் தலையன்பை அவனடியில் நிறுத்திச் சலி யாது நின்று பாசஞான பசுஞானங் கடந்த சிவஞான நிலையினுல் உற்று நோக்கினுல் நேர்நின்றருளுவன். இதுவேஉண்மை. இதனைநன்கு தேர்ந் துய்கவென்று முழக்குங் குரவ என்க. இதனை,

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான், உறவுக் கோனட் டுணர்வுக் கயிற்றினுல், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே." என்ற திருமந்திரத்திற் காண்க.

வேத முகமன் மெய்பகுத்தோர் விரிந்த வறிவின் விமற்சார்கள்
விமல பதியோ ருமாபதியே மேவு மதமு மொன்றேயஃ
தாதி சைவ மேயெனைய வதற்கே றேணி யது வேமற்
றவற்றைத் தழுவும் பிறதழுவா வதுவத் தளிக ளினுங்கண்டே
எதந் தவிர்ந்துற் றுய்வர்விரி வில்லா வறிவர் பொறுமையினென்
றியற்றி னுலு மெம்பிரானுக் கேற்கு மோர்ந்துய் கெனமுழக்கும்
மோத வாகீ சரமுதலே முழக்கி யருள்க சிறுபறையே
முப்பாற் பொருளோர்த் தருள்குரவ முழக்கி யருள்க சிறுபறையே. (உ)

வேதங்களில் அரிபிரமேந்திராதியர்க்குள்ள பரத்துவநிலைகள், முகமன்—உபசாரங்களே என்பதும், சிவன் ஒருவனுக்குள்ள பரத்துவநிலையே, மெய்—உண்மை என்பதும் பகுத்தோர்ந்த விரிந்த அறிவினராகிய மாற்சரியகுண மில்லாத உத்தமர்கள், அநாதி மல முத்தனுகிய உமாபதி ஒருவனே பதி என்பதும், அவனை அடையும் மதமும் ஒன்றே. அது மற்றை மதங்களுக் கெல்லாம் மேலாய்விளங்கும் முதன்மையான சைவமே என்பதும், மற்றெம்

மதங்களும் அச்சைவமதத்தை அடைதற்கு ஏறும்ஏணியே என்பதும், அச்சைவமே மற்றை மதங்களையுந் தன் கீழ் வரிசையாகத் தழுவிக்கொள்ளும் என்பதும், மற்றை மதங்கள் வேறொன்றையுந் தழுவா வென்பதும், இம்முறை அந்தந்தக் கோயில்களிலும் நேரே கண்டும் தெளிந்து துக்க முழுதும் நீங்கித் திருவடி அடைந்துய்வர். விரிந்த அறிவில்லாத அதமர்கள் பொறுமையினல் வேறு வேறு மதங்களைக் கட்டுப்பாடு செய்து கொண்டு எடுத்துச் சொன்னரேனும், அதுவும் அந்தந்த மத தெய்வங்களினும் அந்தரியாமியாய் நின்று தானே அருளுகின்ற எமது சிவபிரானுக்கு ஏற்றதேயாம். இவ்வுண்மை ஓர்ந்துய்கவென முழக்கு முதல் என்க. இதனை,

"விரிவிலா வறிவி னர்கள் வேறொரு சமயஞ் செய்து
எரிவினற் சொன்ன ரேனு மெம்பிராற் கேற்ற தாகும்
பரிவினற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றினனை
மருவினன் வாழ்த்தி யுய்யும் வகையது நினைக்கின் றேனே."

என்ற திருமந்திரத்திற் காண்க.

## சிறுதேர்ப் பருவம்.

தாயினும னல்லசங் கரனுக்கு மெய்யன்பு
சாருமுள் ளத்த ராகிச்
சாப்பிறப் பற்றென்றும் வாழ்நித்தி யானந்த
தண்ணமுத முண்ணப் பெறூர்
பேயர்பேய் முலையுண்டு மன்னுமுயிர் போக்குமப்
பெற்றியா னிரவெொ ரைந்திற்
பேசலால் வஞ்சனூ லென்றறன் பேரினும்
பிறக்குறூ லன்று சொற்ற
மாயன்மா யத்தகப் பட்டனைய வஞ்சமே
மாறுது மேற்கொ டந்த
வழிநின்று வேதாந்த சாரசித் தாந்தநிலை
மாண்சைவ நிந்தை யேசெய்
தீயவயி னவர்கடஞ் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
செல்வநிறை யாமூரி னில்வருதொல் வாகீச
சிறுதேரு ருட்டி யருளே. (க)

பூதகி என்ற பேயின் முலைப் பாலுண்டு அவளைக் கொன்று உயிர் போக்கிய கொலைக் குணத்தனும், பகலிற் கூறாமல் ஐந்து ராத்திரியிற் பேசினமையால் அது வஞ்சகநூ லென்றலைப் பாஞ்சராத்திர மென்கின்ற தன் பேராலும் விளக்கும். அந்நூலை அன்று சொன்னவனுமாகிய மாயனுடைய மாயத்துளகப்பட்டு அந்த வஞ்சகமே மாறாது மேற்கொண்டு அவ்வழி நின்று மாண் சைவநிந்தையே செய்கின்ற தீய வைணவர்கள், சங்கரனுக் கன்பராய்ச் சாவும், பிறப்பும் நீங்கி ஒரு காலத்தும் அழிவில்லாத சிவானந்த அமுத முண்ணப் பெறார். அவர்களுடைய சிறுதேரை (சிற்றறிவை) உருட்டு—அழிக்கின்ற பர என்க. இதனை,
"தாயி னுந்நல்ல சங்கர னுக்கன்பர், ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார், பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய, மாயன் மாயத்துட் பட்டமனத்தரே"
என்ற திருமந்திரத்திற் காண்க.

பரனடியர் மலரகிதர் சகிதரென விருதிறப்
படுவரவர் தம்முண் மேன்மை
பகருமல ரகிதரைமும் மலசகித பிரகிருதி
பற்றிவாழ் விண்டு முதலோர்
மாபின்வழி பட்டுமல முழுதறப் பேரின்ப
வாழ்வுபெறு பாக்கி யம்முன்
மாதேவ னைத்தொழுது பரிபாக முற்றபினர்
வாய்ப்பதா மென்னும் வாய்மை
சுரர்தொழப் படுமானை யவர்தொழுத பின்புதன்
றாயடியர் தம்மை யன்னோர்
தொழுதுயச் செய்விக்கு மெனும்வாக்கி னரிபதந்
தொழுமதத் தவர்கண் முன்னோர்
தெருளுறவி ளக்கியவர் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
சித்தாந்த மேவுநெறி யுய்த்தாண்ட நாவரச
சிறுதேரு ருட்டி யருளே. (உ)

சிவனடியார்கள், மலரகிதரென்றும், மலசகிதரென்றும் இருதிறப்படுவர். திருவருள் வலியால் மலத் தொடர்பின்றி மாயாதீத சிவனேயாகிய சைவ சமயாசிரியர் முதலிய சிவாநுபூதிப் பெருஞ்செல்வர்கள் மலரகிதர். சிவாஞ்ஞையால் சிருஷ்டிஸ்திதி முதலிய அதிகாரத்தொழில் பூண்டு, சுத்த மாயை அசுத்த மாயைகளுக்குக் கீழுள்ள பிரகிருதி மாயா புவன வாசிகளாய்ப் பிறப்பிறப்புற்று வரும் மும்மலத்தினராய் பிரம விஷ்ணுவாதியர்

மலசகிதர்கள். இதனை, "கர்வு ளானயன் கண்ணன்முற் றேவர்கள், யாவருந்தொண்ட ராயினு மும்மலம், ஒவி மெய்யரு ளுண்மையிற் பற்றுபு, மேவு மின்னர் விசேட வடியரே." என்ற சூத சங்கிதையானுங் காணலாம். இம் மலசகிதராகிய பிரம விஷ்ணுவாதியர்க்கு, மலாகிதர்களாகிய ஞானசம்பந்தராதி சமயாசாரியர் முதலியரை முறையாகப் பூசித்து மல நீங்கிப் பேரின்ப முறும் பாக்கியம் முதலிற் சிவனை வழிபட்டுப் பரிபாகமுற்ற பின்புதான் கிடைக்குமென்னும் உண்மையை,

"முழுத்தழன் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள் பிரானை யிகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னர்த்
தொழப்படுந் தேவர்தம் மாற்றெழு விக்குந்தன் றொண்டரையே."

என்னும் திருவாக்கினல் விண்டுமதத்தர் முதலியருந் தெளியும்படி விளக்கி அவர்களுடைய சிறுதேர்ச்சியை உருட்டு பர என்க.

ஒன்றுபா லர்க்காக நியமஞ்செய் கூற்றையுமு
　　தைத்தகரு ளாள னிவனை
ஒன்றிநினை மின்னூன மில்லயவனு மரியனு
　　யொளியாமல் வெளியி னெளிதாய்
மன்றினிற் கின்றனன் சென்றுதொழு மெனையென்று
　　வந்தாயெ னுவ லழைப்ப
மகிழ்ந்துகண் டத்தாவுன் னுடல்காண் பானடியன்
　　வந்தவா றென்று போற்றி
நன்றுமுற் றும்பெற்று வாழுகின் றனனீவிர்
　　நண்ணிலருண் முகம லர்ந்து
நம்மைந்தர் வம்மினென் றின்பருள்வ னென்றினிய
　　நயமுரைத் துலக ராங்குச்
சென்றுதொழ முன்கொளவர் சிறுதேரு ருட்டுபர
　　சிறுதேரு ருட்டி யருளே
சிவநாம மதனினனி யவிர்நாவி னரசடிகள்
　　சிறுதேரு ருட்டி யருளே. (௩)

மனம் ஒருப்பட்டுப் பூசித்த பாலர்க்காக, தான் நியமித்த ஏவலைச் செய்த யமனையும் உதைத்தருளிய கருணையாளனுகிய இப்பரமசிவனை, நீங்களும் மனம் ஒருப்பட்டிருந்து நினைமின்கள் உங்களுக்கு ஊன மொன்றுமில்லை. அவனும் அரியனுய் மறைந்திராமல் உங்களுக்கு அருளவே எளிய

ளுய் வெளிவந்து மன்றில் நிற்கின்றனன். சென்று தொழுங்கள். நான் சென்று தொழுதேன். தொழுகின்ற என்னை மகனே என்றுவந்தாயென்று அழைத்தனன். அதற்கு மகிழ்ந்து தெரிசித்து, "அத்தாவுன் னுடல் காண் பா னடியனேன் வந்த வாறே"என்று துதித்து நன்மை முற்றும் பெற்றுவாழ் கின்றேன். நீங்களுஞ் சென்றால் முகமலர்ந்து நமது மைந்தர்களே வாருங் களென்றழைத்து இன்பமுற்றும் அருள்வனென்று இத்தனை நயமாக உல கர்க்குரைத்து அவர் சென்று தொழும்படி அவர்கள் முன்கொண்ட சிறு தேர்ச்சியை உருட்டிய பர என்க. இதனை,

"ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவர்க்காச்
சென்று தொழுமின்க டில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாயென்னு மெம்பெரு மான்றன் றிருக்குறிப்பே."

என்னுந் திருமந்திரத்திற் காண்க.

பெறற்கரிய திப்பிறவி யுள்ளபொழு தேயலைவில்
பெறலரிய பேறு பெறற்காம்
பெற்றிசிறு தேவநெறி விட்டுமா தேவனடி
பேணுசித் தாந்த சைவ
விறற்பெரிய நெறியினின் றுய்மினித் தேகம்விழின்
மேற்கிடைப் பரிதொ ருக்கால்
மேவினுஞ் சைவநெறி பெறலரிய தாதலான்
மெய்மைசார்ந் துய்மி னெனலைத்
துறக்கப்ப டாதவுட லைத்துறந் தேகிமேற்
ருேன்றின்மதி வேணி யமலன்
றூப்பதம றப்பன்கொ லென்றெனுண் மறுகுமென்
சொல்லருமை யுன்னில் வைத்துத்
திறப்படுமிவ் வுலகர்தஞ் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
சீர்பரவு மாமூரர் நேர்பரவு வாகீச
சிறுதேரு ருட்டி யருளே. (௪)

இதனை, "துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
டிறப்ப னிறந்தா லிருவிசும் பேறுவ னேறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோவென்றெ னுள்ளங் கிடந்து மறுகிடுமே."

என்னுந் திருமந்திரத்திற் காண்க,

அதர்வசிகை தனிமுடித் தோதுசிவ னொருவனே
யரிபிரம னாதி சிவர்
அனைவருந்தி யானிக்க வருள்பரம னொருபொழுது
மழியாத மங்க லஞ்செய்
முதல்வனத னாலனைய சிவநாம மவனுமை
முதுசொமென மறைகள் யாண்டும்
மொழியுமிடை யழிவுறும நித்தநல னேதரு
முராரிமுத லோரை யுன்னிப்
பதனமுற லொழிந்துநித் தியமங்க லஞ்செய்சிவ
பரனைப்பன் னாள ழைக்கிற்
பரிந்தருள்வ னெனும்வாய்மை நின்னில்வைத் துலகுயும்
பான்மையின்வி ளக்கி யருளாற்
சிதமிலக வனையர்தஞ் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
தீயவமண் மாயவவண் மேயதுசெய் தூயரசு
சிறுதேரு ருட்டி யருளே. (ரு)

சிவநாமத்தை அவனுடைய கீர்த்தியுள்ள முதிய சொத்தென்று மறைகள் எங்கும் மொழியும். இடையிலழிகின்ற அநித்திய நலமாத்திரந்தரும் விஷ்ணு முதலியரைத் தியானித்து, (அவர்தரும் பதவிபெறின், அவரழியும்போது அப்பதவியும் அழியுமாதலால் அப்பதவிபெற்று) பதனமுறல்—நழுவுதல் ஒழிந்து, என்றும் நழுவாத நித்திய மங்கல பதவிதரும் சிவனை நழுவிவிடாது பலநாளும் அழைத்தால் இரங்கி அருளுவனென்னும் உண்மையை உலகமுணர்ந்துய்யும்படி உன்னிடத்து வைத்து விளக்கி அருளால், சிதம்இலக—(உண்மை) ஞானம் விளங்கும்படி அவருடைய சிறுதேர்ச்சியை உருட்டிய பர என்க. இதனை,

"சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம் மேனியெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாயி லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே."

என்னுந் திருமந்திரத்திற் காண்க.

தருந்துணைவ னுயருளு மரசனையு மேவலர்க
டம்மொடொப் பென்றல் போலீ
சனைமான்மு னோரினிக ராப்பொதுவி னேத்துமவர்
தாமுண்மை தேர்ந்துய் யுமா
அருந்துணை யை யடியார்த மலறீர்க்கு மருமருந்
தாயசிவ னைப்பி ரமன்மால்
ஆதியரொ டொப்பெனப் பேதையர்கொள் பொதுநீக்கி
யருடன்னை யேது திப்பார்
பெருந்துணையை மிகுபெரும் பற்றையருள் புலியூர்ப்
பிரானையே போற்றி நாளும்
பேசிவாழ் வீர்நம்பி றப்பகலு மென்றருள்
பெருந்திருத் தாண்ட கத்தால்
திருந்துணையு மாவுலகர் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
சீவருபு மாவருளின் மேவுதிரு நாவரசு
சிறுதேரு ருட்டி யருளே. (௬)

குடிகள் வேண்டுவனதந்து காக்குந்துணைவனாய் நின்றருளும் அரசனையும் அவனேவலாளரொடு ஒப்பெனக்கொண்டு சமத்துவவழிபாடுசெய்தால், அதுராஜத்துரோகமுந் தண்டனைக்கு ஏதுவுமாகுமென்பதை உற்றுநோக்காதசிலர், ஒப்புக்கூறுதல் போல், பிரமவிஷ்ணுவாதிதேவர்முதலிய சீவர்யாவரையுந் தன்னடிமைகளாக வைத்தாள்பவனென்னும்பொருளையே தரும் ஈசன் என்னும் திருநாமத்தையுடைய சிவனையும், மால் முதலியரொடு நிகராகக் கொண்டு பொதுவிற் சமத்துவ வழிபாடு செய்து, தாம் நரக முறுவதுமன்றித், தாயையும், மனைவி மக்கள் முதலியரையும், ஒப்ப நோக்கும் சமபுத்தியர் போல, எங்களுக்கு எல்லாத் தெய்வமுஞ் சரியே வேற்றுமை இல்லை என்று பிறர்க்கும் போதிக்கும் பேதையரும் உண்மை தெளிந்து உய்யும்படி, "அருந்துணையை என்று எடுத்து சிவபிரானை, மற்றைத் தேவரோடு ஒப்பென்று அறிவிலார் கொள்கின்ற பொதுத் தன்மை நீக்கி, எத்தேவர்க்கும் மேலாய் மகாதேவன் சிவன் ஒருவனே என்னும் சிறப்புத் தன்மையே பேணித் துதிப்பார்க்குப் பெருந்துணையைப்—பிறவா நாளே என முடிக்கும் பெருந் திருத்தாண்டகத்தால், திருந்து உள்ளம் நையும்படி உலகர் சிறுதேர்ச்சியை உருட்டிய பர என்க.

கரும்புகனி யறம்விளக் கரியதவம் வெளிகறவை
காமர் வழிசெந்நெ லாதி
கனந்தரும் பொருள்போலி னந்தருமெய் நூலெலாங்
கையெடுத் தோது வாய்மை
தரும்புனித சைவநெறியி ருக்கவுமி ரும்புகாய்
தறுகண்மற மின்மி னித்தீ
தள்ளவமி ருட்டறையின் மலடுகுழி பதரெனச்
சாற்றுபய னற்ற வாகி
வரும்பொய்மத நிலைகளின்வி ழுந்துலைவொ ழிந்துமுன்
வயக்குசித் தாந்த நிலையே
மன்னினின் றுய்மினென வேபழமொ ழிப்பதிக
வாய்மையுனில் வைத்தி லக்கித்
திரும்பிவரு மாவனையர் சிறுதேரு ருட்டுபா
சிறுதேரு ருட்டி யருளே
தேசமார் நேசர்பணி மாசில்வா கீசமணி
சிறுதேரு ருட்டி யருளே. (எ)

கரும்பிருக்க இரும்பை மென்றிளைத்தலும், கனியிருக்கக் காய்கடித்தலும், அறமிருக்க மறம் (பாவம்) புரிதலும், விளக்கிருக்க மின்மினித் தீக் காய்தலும், தவமிருக்கத் தள்ளத்தக்க அவம் புரிதலும், வெளியிடமும் கறவைப்பசுவுமிருக்க இருட்டறையில் மலடுகறந்தெய்த்தலும், நல்லவழி இருக்கப் பாழ்ங்குழியில் விழுதலும், நெல்லிருக்கப் பதரைக் கொள்ளலும் போலச் சுத்தாத்துவிதசித்தாந்த சைவமிருக்கப் பயனற்ற அந்நிய மதங்களில் விழுந்துலையாமல் அச்சைவ நெறியிலேயே நிலைத்து நின்றுய்யுங்களென்று பழமொழித் திருப்பதிகத்தால் உலகர் திரும்பி வரும்படி அவர்கள் சிறுதேர்ச்சியை உருட்டிய பர என்க.

எஞ்சுதலி லைந்தொழில்செய் சிவனெழுத் தைந்தினும
தின்றியின் பொன்றே கொணின்
இனியதிரு நாவுக்க ரசுமனுப் பிரணவமு
னிலகெழுத் தைந்து மேலென்
றஞ்சியொழி கலிமெலிய வழலோம்பு மப்பூதி
யாரென்று நீபு கழ்ந்தே
அவர்புரிசி வார்ச்சனைகள் சிவயாக முதலாய
வரியசிவ நியம வாய்மை

விஞ்சுபுகழ் தேற்றவொளி ரவருமன வாதமண
மெய்வாக்கு மூன்று மொன்ற
மேற்கொண்டு போற்றிடுநின் மகிமையெவர் தா
விளங்குநரெ ஞவி ளக்கும்
செஞ்சொன்மறை யாலுலகர் சிறுதேரு ருட்டுப
சிறுதேரு ருட்டி யருளே
சிதநிலைய பதமருவு மிதமொழிய முதவரசு
சிறுதேரு ருட்டி யருளே.

"அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்புமப்பூதி" என்று நீ டைய சிவபூசை சிவயாக முதலிய சிவநியமங்களின் புகழைத் தே பெற்று ஒளிருகின்ற அவ்வப்பூதியடிகள், நீங்காத ஐந்தொழில் செய்கி சிவனுடைய ஐந்தெழுத்தைக் காட்டிலும், அத்தொழிலின்றி இன் ஒன்றையேகொண்ட உன்னுடைய இனிமையான திரு(ஓம்)நாவுக்க என்கின்ற பிரணவ சகித பஞ்சாக்ஷரத்தையே மேலாகக்கொண்டு அன தம் முக்கரணங்களும் ஒருப்படப்போற்றும் நின்மகிமையை நீ அறிவிக் மல் தாமாக யாவர் அறிவரென்று திருவுளங்கொண்டு ஆங்காங்கு விளக்கி ளும் செஞ்சொல் மறையால் உலகர் சிறுதேர்ச்சியை உருட்டிய பர எ

சீவபர செகமித்தை பிரமமே மெய்ப்பொரு
டிகழ்த்துநா மேபி ரமமென்
தீதகல முப்பொருளு மெய்ம்மையே பாசவலி
தீர்ந்துசுத் தாத்து விதமாய்
ஓவறச் சிவமுமான் மாவுமொழி யாவின்ப
முறுதலே முத்தி பிரமம்
ஒன்றேமற் றில்லையெனி னணையபர முத்தியின்
புறுவரா ரென்றெ துக்கி
மேவுதலை வன்றலைவி நிலையிலோர்த் தருள்பதிக
மேற்பலபு கன்று மங்கை
வில்வளைக வர்ந்தவன்வ ரானெனினு மாய்தியென
விழையருங் கற்புணர்த்தித்
தேவநெறி யுறவுலகர் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
தெய்வநிறை சைவநெறி யுய்யவரு மெய்யரசு
சிறுதேரு ருட்டி யருளே.

மா, சிவத்துடன் எப்போதுமிருந்து ஒழியாத இன்புறுதலே . இதற்கு விரோதமாய் நாமே பிரமமென்னும் மாயாவாதிகள் றுதான் உள்ளது. ஆன்மா என்பதொன்றில்லை என்றால் முத்தி பெறுகிறவரே இல்லையாம். ஆகவே முத்தியும் இல்லை யென்றாகி கூறும் வேதாகமாதிகளும் பொய் யென்றாகும். ஆதலால் இவ் விளைவைவிடுக என்றொதுக்கிவிட்டுப் பிரமமாகிய தலைவனும், ளாகிய தலைவிகளும் எப்போதுமுள்ள பொருள்களே. அத்தலைவனை தலைவிகள் பிரிவின்றிச் சேர்ந்திருந் தின்புறுதலே முத்தியென்று க்கும் பதிகங்கள் பாடியருளி, அந்தமுறையில் அத்தலைவான் வாராவிட் லும் மனமே மறந்து விடாதே. நீ கொடியையாதலால் வந்திலன். ஆயி னும் நீ அவன் சேவடியையே ஆய்—தியானித்துக் கொண்டேயிருப்பா யென்று அரிய கற்பினது நிலையை விளக்கி உலகர் சைவநெறி யுறும்படி அவர் சிறுதேர்ச்சியை உருட்டிய பர என்க. இதனை,

"பஞ்சிக்காற் சிறகன்னம் பறந்தார்க்கும் பழனத்தான்
வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கொடியையே."

என்பது முதலிய திருமந்திரங்களாற் காண்க.

பவத்துலைவு றுதுயிர்கள் புகலெய்த வருடந்து
பாலிப்ப தரிய புகலூர்ப்
பண்பென்ப தோர்த்துலகை யுய்விக்க வீற்றினப்
பரவுபுக லூர டுத்துப்
தவத்தர்பணி நீயாண்ட ருஞ்செயல்பு ரிந்துபர
சைவமெங் கணும்வி ளக்கித்
தண்கயிலை நின்றுநீ யிங்குவா வருள்பரன்
சார்கெனவ ழைக்கு முன்னர்
புவித்தலனை விட்டுனடி யிற்போது கின்றனன்
புண்ணியா வென்று நீயே
புக்குவாழ் வுறசுதந் திரமுநீ யெண்குணப்
புநிதசிவ னெனல்வி ளக்குஞ்
சிவத்துவம் பெறவுலகர் சிறுதேரு ருட்டுபர
சிறுதேரு ருட்டி யருளே
திருப்புகனல் லூரிலர னருட்கழலின் வாழரசு
சிறுதேரு ருட்டி யருளே.

திருநாவுக்கரசர், அஷ்டமங்கள திவ்விய குணபுரித சிவனே எ நம்பியாண்டார்நம்பிகள், "பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி வரசாய பரமகா ரணவீசன்" என விளக்குதலாலுந் தெளிக.

விளிதேக மிந்தியங் கரணமோ டொன்றையே
　　மேவுபர மென்று பற்றி
விரவுபக் குவவளவி னிற்குநரை மென்மெல்ல
　　வெவ்வே றணித்த ணித்தாய்
ஒளிவிலொரோர் பொருள்காட்டி யவைபாம் பாமென்
　　றுணர்த்திமே லுய்க்கு முறையில்
ஓதுமுப சாரவே தாந்தநிரை சோபான
　　வுண்மைபிற ழாது வாழ
அளியாரு மெய்யடியர் நீறுகண் மணியெழுத்
　　தைந்துமுத லாய வாழ
அவற்றின்மேற் சைவவே தாந்தநிலை வாழமே
　　லனையவே தாந்த நூலின்
தெளிவாய்மு டிந்தமுடி சித்தாந்தம் வாழநீ
　　சிறுதேரு ருட்டி யருளே
திருவருளி னூரின் வருபரம வாகீச
　　சிறுதேரு ருட்டி யருளே. (கக)

திருநாவுக்கரசர் பிள்ளைத் தமிழ்,
முற்றுப்பெற்றது.